
'மல்டி-ஸ்பெக்'
'வால்வோ'
'விப்க்யோர்'
601
புதிய சாயல்கள்
மற்றும் கணக்கற்ற
புதிய தினுசுகள்
மாமூலுக்கு முற்றிலும்
மாறுபட்டவை
இளமை ததும்பும் இளம் பெண்களுக்கு
ஃபின்லேயின் ரிஸர்ச் அண்ட் டெவலப்மெண்ட்
டிபார்ட்மெண்ட் வழங்கும் தனிச் சிறப்புள்ள
புதுமைகளின் பவனி—'விப்க்யோர்' வானவில்
பிரிண்டுகள் "'வால்வோ' பாட்டிக் மீது புன்னகை
பூக்கும் பூக்கள்" 'மல்டி-ஸ்பெக்' டாப்புக்காக
போலியெஸடர்.
அதோடு. சாயந்தோய்த்த மற்றும் பிரிண்டெட்
லான்களின் கணக்கற்ற திநுசுகள். எழில்
கொஞ்சும் டிசைன்களில் பாப்ளின். உடலுடன்
உறவாடும் மிருதுவான காட்டன். அழகிய
மனங்கவர் கேம்ப்ரிக். விரும்புவதை வாங்குவீர்,
வாங்கவே விரைந்திடுவீர்!
ஃபின்லேஸ்—எப்போதும் புதுமை புகுத்துவோர்
Finlay's
ஃபின்லே மில்ஸ் லிட்./கோல்டு மோஹர் மில்ஸ் லிட்.
ASP/FM/46 A

# கல்கி

ராக்ஷஸ ஆனி 22
ஜூலை 6, 1976

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.






# தமிழ்நாடு மாநில கூட்டுறவு வங்கி யின் ரொக்க சர்டிபிகேட்டுகளின் (CASH CERTIFICATES) மூலம் உங்களுடைய முதலீடுகளுக்கு 17.75% வரை வட்டி பெறுங்கள்



| முதலில் செலுத்த வேண்டிய தொகை | ரூ 100/- | ரூ 250/- | ரூ 500/- | ரூ 1000/- |
|---|---|---|---|---|
| உரிய காலத்திற்குப் பிறகு பெறப் போகும் தொகை | ரூ | ரூ | ரூ | ரூ |
| 36 மாதங்களுக்குப் பிறகு | 131.80 | 329.50 | 659.00 | 1318.00 |
| 48 ,, ,, | 144.60 | 361.50 | 723.00 | 1446.00 |
| 60 ,, ,, | 158.50 | 396.25 | 792.50 | 1585.00 |
| 61 ,, ,, | 168.00 | 420.00 | 840.00 | 1680.00 |
| 72 ,, ,, | 184.50 | 461.25 | 922.50 | 1845.00 |
| 84 ,, ,, | 204.30 | 510.75 | 1021.50 | 2043.00 |
| 96 ,, ,, | 226.30 | 565.75 | 1131.50 | 2263.00 |
| 108 ,, ,, | 250.60 | 626.50 | 1253.00 | 2506.00 |
| 120 ,, ,, | 277.50 | 693.75 | 1387.50 | 2775.00 |

சிறு முதலீடு செய்வோர் தேவைக்கேற்ற எமது திட்டங்கள் :

| உரிய காலத்திற்குப் பிறகு பெறப் போகும் தொகை | ரூ 25/- | ரூ 50/- | ரூ 100/- | ரூ 500/- | ரூ 1000/- |
|---|---|---|---|---|---|
| முதலில் செலுத்த வேண்டிய தொகை | ரூ | ரூ | ரூ | ரூ | ரூ |
| 36 மாதங்களில் முடியும் டெபாசிட்டுகள் | 18.97 | 37.94 | 75.88 | 379.40 | 758.80 |
| 48 ,, ,, | 17.29 | 34.58 | 69.16 | 345.80 | 691.60 |
| 60 ,, ,, | 15.77 | 31.54 | 63.08 | 315.40 | 630.80 |




முழு விவரங்களுக்கு எங்களை அல்லது உங்கள் அருகாமையிலுள்ள எங்கள் கிளைகளை அணுகவும்

**தமிழ்நாடு மாநில கூட்டுறவு வங்கி லிமிடெட்**

379, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு, சென்னை-600001

தந்தி : "URBANK" போன் : 20367 (3 லைன்கள்) டெலக்ஸ் : MS 7225

TNSC-124/79

# நெருக்கடி நிலைப் பிரகடனம் - பத்திரிகைத் தணிக்கை


கல்கி

மலர் 34

இதழ் 49




தமிழ்த்திரு நாட்டினைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# ஜனநாயகத்தைக் காப்போம்!

**இந்த வாரம் சுயராஜ்யா பத்திரிகை தனது தேசப் பணியின் இருபதாவது ஆண்டினைத் தொடங்குகிறது. இதனை யொட்டி அதன் ஆசிரியர் திரு ஆர். வேங்கட ராமன் எழுதியுள்ளவை கல்கி பத்திரிகைக் கும் நூற்றுக்கு நூறு பொருந்துமாதலால் அதன் சில பகுதிகளைத் தமிழாக்கம் செய்து இங்கு பிரசுரிக்கிறோம்:**

சுயராஜ்யா பத்திரிகையின் ஆசிரியர் யாராக இருந்தாலும் சரி, அது ஞானி ராஜாஜியின் பத்திரிகையாகவே கருதப்பட்டு வந்திருக்கிறது. அவரது எழுத்துக்கள் நிரந்தர உண்மைகளைக் கூறும் சாசனங்களாக விளங்கு கின்றன. சுருக்கென்று மனத்தில் தைக்கும்படி சுருக்கமாக எழுதினார். அரசியல், சமூக, பொருளாதார பிரச்னைகளில் அச்சமின்றி நேரடியாகக் கருத்துக்களை வெளியிட்டார். இதனால் சுயராஜ்யாவுக்கு முக்கியத்துவமும் கௌரவமும் ஏற்பட்டது.

ராஜாஜி ஜனநாயகக் காவலனாக சுயராஜ்யா என்றும் விளங்க வேண்டும் என விரும்பினார். நேர் பாதையிலிருந்து திசை தப்பிச் செல்பவர்களை உடனே கவனித்து ஐயத்துக்கு இடமின்றிக் கண்டித்தார். கட்சி வேறு, ஆட்சி வேறு என்று இனம் பிரித்துக் காட்டினார். ஆட்சியில் இருப்பவர்கள் இதைத் தெளிவாக உணர வேண்டும், குழப்பிக் கொள்ளக்கூடாது என்றார்.

ஜனநாயகத்துக்குத் தன்னை அர்ப்பணித் துக் கொண்டிருந்த சுயராஜ்யா அவர் வழி காட்டிச் செல்லத் தன் கடமையிலிருந்து சிறிதும் பிறழவில்லை.

இன்று ஜனநாயகத்தைப் பேரபாயங்கள் சூழ்ந்துள்ளன. நெருக்கடி நிலைமை என்று காரணம் காட்டிப் பல அடிப்படை உரிமைகள் பறிக்கப்பட்டுவிட்டன. ஒரு சர்வாதிகார ஆட்சியை வலுப்படுத்தப் பாராளுமன்ற ஜனநாயகத்தின் மரபுகள் கேலிக்குள்ளாகிக் காலின் கீழ் போட்டு மிதிக்கப்படுகின்றன. ஜனநாயகம் வெறும் கூடு ஆகிவிட்டது. அதன் ஜீவன் நீண்ட காலத்துக்கு முன்பே மறைந்து போயிற்று.

இந்தச் சூழலில் சுயராஜ்யா உண்மையான ஜனநாயகத்தின் லட்சியங்களுக்காகப் பாடு பட உறுதி பூணுகிறது. தனி மனிதனின் சுதந்திரம் தனி மனிதனின் கௌரவம் ஆகிய வற்றின் அடிப்படையில் அமைந்த ஜனநாய கத்தின் உன்னத லட்சியங்களை அடையப் பாடுபடுவதில் நமது மக்களின் ஒத்துழைப்பை வேண்டுகிறது.



## "குமாரி" லக்ஷ்மி

தமிழ் நாட்டின் குணசித்திர நடிகையான லக்ஷ்மி, தெலுங்குப் படங்களிலும், மலை யாளப் படங்களிலும் நடித்துப் புகழ்க் கொடி நாட்டி வருவது கண்டு தமிழர்கள் பெருமிதம் அடையும்போது மேலும் ஒரு மகிழ்ச்சிக்குரிய தகவல் வந்திருக்கிறது. கேரளத்திலும் தமிழ் நாட்டிலும் சக்கைப் போடு போட்ட மலை யாள மொழிப் படமான ''சட்டைக்காரி'' யில் கதாநாயகியாக வந்த நடிகை லக்ஷ்மிக்கு, ''குமாரி'' என்ற கேரள நாட்டின் பாராட் டுப் பட்டம் சூட்டப்பட்டிருக்கிறது.

இளம் வயதிலேயே பல தமிழ்ப் படங் களில் நல்ல பாத்திரங்களை ஏற்று நடித்துப் பெரும் புகழும் பெற்றுவிட்ட நடிகை லக்ஷ்மி இப்போது ஹிந்திப் படங்களிலும் நடிக்கிறார். அவர் நடித்த ''சட்டைக்காரி'' படம் ஹிந்தி யில் ''ஜூலி''யாக வெளிவந்து புகழ்க் கொடி நாட்டி வருகிறது. அதிலும் லக்ஷ்மி ஜூலியாக நடித்து ஹிந்தி மொழியினரின் பாராட்டுதல் களைப் பெற்று வருகிறார்.

ராஜாஜி அவர்களின் வாழ்வின் மூச்சாக இருந்த மதுவிலக்குப் பற்றிய சிறந்த படமான ''திக்கற்ற பார்வதி''யைப் பார்த்தவர்கள் லக்ஷ்மியிடம் நேரில் பார்வதியையே கண் டார்கள். கண்டதோடு நில்லாமல் லக்ஷ்மிக்கு ''ஊர்வசி''ப் பட்டம் கிடைக்கும் என்றும் எதிர்பார்த்தார்கள். அந்தப் படத்தில் நடித் ததற்காக ஏராளமான ரசிகப் பெருமக்களின் ஏகோபித்த பாராட்டைப் பெற்ற லக்ஷ்மிக்கு, ''ஊர்வசி'' கிட்டாத குறை தீர இதோ ''குமாரி'' பட்டம் கிடைத்து விட்டது.

அவருக்குக் ''கல்கி'' நேயர்களின் மகிழ்ச் சியைத் தெரிவித்துக் கொள்ளும் விதத்தில் இந்த இதழ் மேல் அட்டையில் ''குமாரி'' லக்ஷ்மியின் புகைப்படத்தைப் பிரசுரித்திருக் கிறோம்.

வண்ணப் புகைப்படம்

நன்றி: ''பொம்மை''

# தி. மு. க. தீர்மானம்

தி. மு. கழகத்தின் செயற்குழு, ''நெருக்கடி நிலைமை'' என்று ராஷ்டிரபதி செய்துள்ள பிரகடனத்தை வாபஸ் பெற வேண்டும் என்றும், கைது செய்யப்பட்டுள்ள தேசத் தலைவர்கள் விடுதலை செய்யப்பட வேண்டும் என்றும் பத்திரிகைச் சுதந்திரத்தைத் திரும்பவும் வழங்க வேண்டு மென்றும் கோரித் தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

தி. மு. கழகத்தின் செயற்குழு உறுப்பினர் மொத்தம் 75 பேர்கள். அவர்களில் அவசரமாகக் கூட்டப்பட்ட இக் கூட்டத்துக்கு 63 பேர் வந்திருந்தனர். இரண்டரை மணி நேர விவாதத்துக்குப் பிறகு இத்தீர்மானத்தை ஏகமனதாக நிறைவேற்றியுள்ளனர்.

## அமெரிக்காவை வாழ்த்துகிறோம்!

உலக நாடுகளிலே பெரும் ஜனநாயக நாடாகக் கொண்டாடப்படுவது அமெரிக்கா.

அமெரிக்க ஜனநாயகத்துக்கு இருநூறு வயதாகப் போகிறது. இந்த ஜூலை மாதம் 4ந் தேதி இருநூறாவது ஆண்டின் துவக்கம். வாழ்த்துத் தெரிவிக்கிற நேரத்தில் சுதந்திரப் பொருளாதாரம் அங்கே எத்தகைய அற்புதங்களைச் சாதித்திருக்கிறது எனப் புரிந்து கொள்வோம். மக்களின் சுதந்திரங்கள் எந்த அளவுக்குப் போற்றிப் பாதுகாக்கப்படுகின்றன எனக் கற்றறிவோம். ஜனநாயக மரபுகள் எந்த அளவுக்கு அந்த நாட்டின் கௌரவத்தை உயர்த்தியுள்ளன என்பதை அறிந்து கொள்வோம்.

அமெரிக்க ஜனநாயகத்தின் சிறப்பு என்ன? சர்வ சாதாரணக் குடிமகனும், மரக் குடிசையில் வாழும் மனிதனும் நாட்டின் ஜனாதிபதியாகலாம். இல்லையெனில், ஆப்ரகாம் லிங்கன் ஜனாதிபதி பதவிக்கு வந்திருக்க முடியுமா? இப்படி எல்லோருக்கும் எப்பதவியையும் அடையச் சம வாய்ப்பு!

சமீப காலத்தில் வேறு ஒருவிதமான நிகழ்ச்சியைக் கண்டோம். ஜனாதிபதி நிக்ஸன் மீது ஊழல் வழக்கு வந்தது. பத்திரிகைகள் தாம் முதன் முதலில் ஊழல் விஷயத்தை வெளியிட்டன. பொதுஜனங்களிடை நிக்ஸன் பதவி விலக வேண்டும் என்ற கிளர்ச்சியே எழுந்தது. அவர் பதவியைவிட்டு இறங்கினர்.

இரண்டாவது உலக மகாயுத்தத்தின்போது ரூஸ்வெல்ட் ஜனாதிபதியாக இருந்தார். அவர் உலகப் பெருந் தலைவர்களுள் ஒருவராகக் கருதப்பட்டவர். அவரை அமெரிக்க மக்கள் ஒரு முறையல்ல, இரண்டு முறையல்ல நான்கு முறை ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுத்தனர். ஆனால் யுத்தம் மும்முரமாக நடந்து கொண்டிருக்கையில் அவர் திடீர் என்று காலமானர். அவரிடத்துக்கு உதவி ஜனாதிபதியாக இருந்த ட்ரூமன் பதவிக்கு வந்தார்.

ரூஸ்வெல்ட்டோடு ஒப்பிடுகையில் ட்ரூமன் சாதாரண மனிதர். ஆனால் பொறுப்போ மிகப் பெரிய பொறுப்பு. உலக யுத்தத்தை வெற்றிகரமாக நடத்திச் செல்ல வேண்டும்.

அமெரிக்க மக்கள் சோர்ந்துவிடவில்லை. ஜனாதிபதி பெறும் பலமும் செல்வாக்கும் மக்களிடமிருந்துதான் வருகின்றன என்பதை உணர்ந்து அவருக்குப் பேராதரவு தந்தனர். ரூஸ்வெல்ட் பாதியில் விட்ட பணியை ட்ரூமன் வெற்றிகரமாக நடத்தி வைத்தார். அமெரிக்க மக்கள் அடுத்த தடவை அவரையே ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுத்தனர்.

இதுதான் உண்மை ஜனநாயகத்தின் சிறப்பு.

ஜனநாயக நாட்டில் தலைவரை வைத்து ஆட்சியும் நிர்வாகமும் அமைவதில்லை. மக்கள் கொடுக்கும் செல்வாக்கையும் ஆதரவையும் வைத்தே தலைவர்கள் உருவாகிறார்கள். சாமான்ய மனிதனும் சரித்திர புருஷனாகக் கூடிய வாய்ப்பு ஜனநாயகத்தில்தான் இருக்

ராஜாஜி சிந்தனை

### காங்கிரஸ் பாணி சோஷலிசம்

காங்கிரஸ் பாணி சோஷலிஸம் ஏகபோக்கியங்களையும் சலுகைகளையும் வழங்குவதன் மூலம் பணக்காரர்களை மேலும் பணக்காரர்களாக்குகிறது. ஏழைகளை மேலும் ஏழைகளாக்குகிறது.

திட்டத்துக்கான செலவுகளைச் சரிக்கட்டவும் பற்றாக்குறை பட்ஜெட்டை ஈடு கட்டவும் பணப் புழக்கம் அதிகரிக்கப்படுகிறது. இந்தப் பண வீக்கம் காரணமாக விலைவாசிகள் உயர ஏழைகள் மேலும் ஏழைகளாகின்றனர்.

காங்கிரஸ் பாணி சோஷலிஸம் பணக்காரர்களுக்கும் ஏழைகளுக்கும் உள்ள வித்தியாசத்தைக் குறைக்கவில்லை. ஏற்றத் தாழ்வை அதிகரிக்கவே செய்கிறது. பொருளாதார ரீதியாக மட்டுமின்றி மனத்தளவிலும் வித்தியாசங்களை, வகுப்புத் துவேஷங்களை வளர்க்கிறது காங்கிரஸ்.

— சுயராஜ்யா, மார்ச் 4, 1961

கிறது. 'இந்தத் தலைவரை விட்டால் நாடு என்ன ஆகுமோ' என்று மக்கள் அங்கு ஏங்குவதில்லை.

சக்தியும் பலமும் நம்மிடம்தான் இருக்கிறது என்று உணர்ந்த ஜனநாயக மக்கள் அமெரிக்க மக்கள்.

அவர்கள் ஜனநாயகப் பண்பு நீடு வாழ்க!

## உலகக் கோப்பை

கிரிக்கெட்டில் உலகக் கோப்பையைப் பெற 'விண்டீஸ்' (மேற்கிந்தியத் தீவு கோஷ்டியினர்) என்னமாய் ஆடியிருக்கிறார்கள்! அவர்களோடு இறுதிப் பந்தயத்தில் மோதிய ஆஸ்திரேலியர்கள்தாம் என்னமாய்ப் போராடியிருக்கிறார்கள்!

பத்திரிகைகளில் செய்தியைப் படிக்கும்போதே மெய்சிலிர்க்கிறது!

ஆரம்பத்தில் ஃபிரெடரிக்ஸ், காளிசரண், கிரீனிட்ஜ் ஆகிய சூரர்கள் அவுட் ஆனதும் நெருக்கடியான நிலையில் வந்த லாயிட் வெளுத்து வாங்கினார். எண்பத்தைந்து பந்துகளில் நூற்றி இரண்டு ரன்களைக் குவித்தார்.

பின்னால் ஆட வந்த ஆஸ்திரேலியர்கள் கடிகாரத்தோடு போட்டி போட்டுக்கொண்டு நெஞ்சைக் கையில் பிடித்துக்கொண்டு போராடினர். ஒரு ரன் என்றால் ஒரு ரன் என்று பாடுபட்டு ஓடி ஓடி எண்ணிக்கையைக் கூட்டினர். ஐந்து 'ரன் அவுட்'கள் என்றால் எப்படி விக்கெட்டுகளுக்கிடையில் அவர்கள் ஓடியிருக்க வேண்டும் என ஊகிக்கலாம். ஒன்பதாவது விக்கெட் விழுந்து பத்தாவது விழு முன்னர் நாற்பத்தொரு ரன்கள்! பதினேழு ரன்கள் வித்தியாசத்தில் விண்டீஸ் வென்றனர்.

காப்டன் லாயிடும்
'புருடென்ஷியல்' உலகக் கோப்பையும்



உலகக் கோப்பைப் போட்டிகள் எந்த மனப்பக்குவத்துடன் ஆடப்பட வேண்டுமோ, அந்த மனப் பக்குவம் முழுமையாக நிலவியிருக்கிறது.

விண்டீஸையும் காப்டன் லாயிட்டையும் வாழ்த்துவோம்.

## சரித்திர ஆசிரியர் மறைவு!

பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் தமது 83வது வயதில் காலமானார். அவர் வாழ்ந்த நாள் எல்லாம் தமிழக சோழ—பாண்டிய — சேர மன்னர்களின் சரித்திரத்தை வகைப்படுத்தி அமைத்துக் காட்டுவதிலேயே செலவழித்தார். தமிழக சரித்திரம், கல்வெட்டுகளிலும், செப்பேடுகளிலும் சாஸனங்களிலும் மெய்கீர்த்திகளிலும் மறைந்து கிடக்கின்றது. இவை யாவற்றையும் ஆராய்ந்து ஒன்றுக்கொன்றுள்ள தொடர்பு கண்டு சீரான சரித்திரத்தை எழுதுவது என்பது எளிதல்ல. அத்தகைய சீரான ஆராய்ச்சிப் பணியை மேற்கொண்டு ஆங்கிலத்தில் 'தென்னாட்டுச் சரித்திரம்'; 'சோழர் வரலாறு'; 'பாண்டிய அரசு' ஆகிய நூல்களை எழுதினார். பாரத நாட்டிலும் வெளிநாடுகளிலும் உள்ள சரித்திர ஆராய்ச்சியாளர்கள் திரு சாஸ்திரியாரின் ஆராய்ச்சிப் பணியைப் பெரிதும் மதித்துப் போற்றி வந்தார்கள். விருப்பு வெறுப்பற்று, உண்மையிலேயே நாட்டம் கொண்டு சரித்திர ஆராய்ச்சிகளைத் தொடர்வதே நாம் அவருக்குச் செய்யும் அஞ்சலியாகும்.

## சட்ட நிபுணர்கள் ராஜினாமா

திரு என். ஏ. பால்கிவாலா ராஜினாமா செய்து வெளியிட்டுள்ள அறிக்கை:

''அலகாபாத் தீர்ப்பின் எதிராகவுள்ள சட்ட நுணுக்கங்களை நான் மதிப்பவன். அந்நிலையினின்று நான் இன்றும் மாறுபடவில்லையாயினும், இன்று காலை மத்திய ஆட்சி எடுத்துள்ள சில நடவடிக்கைகள் நான் என் வாழ்நாள் முழுதும் கடைப்பிடித்து வந்த கொள்கைகளுக்கும், போற்றி வந்த கருத்துக்களுக்கும் முரணாக இருப்பதால், உயர்நீதி மன்றத்தில் வரவிருக்கும் வழக்கில் பிரதமரின் தரப்பு வக்கீலாகப் பணியாற்ற இயலாமையைப் பிரதமருக்குத் தயவுசெய்து தெரிவிக்குமாறு சட்ட மந்திரிக்கு எழுதியிருக்கிறேன்.''

* * *

இந்திய அரசாங்க துணை வழக்கறிஞரான (additional solicitor general of India) திரு எஃப். எஸ். நாரிமன் அவர்கள், மத்திய அரசாங்கச் சட்ட இலாகா காரியதரிசிக்குத் தாம், தமது அரசாங்க உத்தியோகத்திலிருந்து ராஜினாமாச் செய்வதாக மூன்று வரி கடிதம் ஒன்று அனுப்பியிருக்கிறார். அக்கடிதத்தில் தாம் ராஜினாமாச் செய்வதற்குக் காரணம் ஒன்றும் அவர் தெரிவிக்கவில்லை.

# முருகப் பெருமான்

(17)

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

சரீரத்தை வறுத்து எடுக்கிற அக்னியின் தாபமே தெரியாமல் குமாரில பட்டர் ஆசார்யாளின் சந்நிதான விசேஷத்தால் அமிருதத்தில் நனைந்த மாதிரி இருந்தார். இந்தக் கட்டத்தை நினைக்கிறபோது 'மூக பஞ்ச சதீ' ச்லோகம் ஒன்றும், அப்பர் ஸ்வாமிகளின் பாடல் ஒன்றும் ஞாபகம் வருகின்றன.

'மூக பஞ்சசதீ' ச்லோகம் 'ஜனேபம் ஸந்தப்தோ' என்று ஆரம்பிக்கிறது. 'நான் நெருப்பில் நன்றாக வெந்து கொண்டிருக்கிறேன்' என்கிறார் மூகர். என்ன நெருப்பு? ஸம்ஸாரம் என்பதுதான் நல்ல கோடை கால சூரியன் மாதிரிக் கொளுத்தி எடுக்கிறதாம். 'எனக்குப் பரம ஞான தீர்த்தம் ஒரு துளிகூடக் கிடைக்காமல் வேகிறேன்' என்கிறார். 'பர ஞான பயஸ்' — 'பயஸ்' என்றால் தீர்த்தம்; பால் என்றும் அர்த்தம். பர ஞானப் பாலைத் தான் அம்பாள் ஞானசம்பந்தருக்குக் குழந்தைப் பிராயத்திலேயே அநுக்ரஹித்தாள். அதனால் அவர் ஆரம்பத்திலிருந்தே கர்மம், பக்தி, ஞானம் மூன்றைப் பற்றியும் சரியான படி தெரிந்து கொண்டு உபதேசித்தார். அவர் பெயரிலேயே 'ஞானம்' இருக்கிறது. பக்தியை அவர் யதேஷ்டமாக வளர்த்தது எல்லோருக்கும் தெரிந்தது. வேத கர்மாக்களையும் அவர் எங்கு பார்த்தாலும் உயர்த்திப் பாடியிருக்கிறார். உதாரணமாக, 'கற்று ஆங்கு எரி ஓம்பிக் கலியை வாராமே செற்றார் வாழ் தில்லை' என்கிறார். 'கற்று — வேத அத்யயனம் செய்து; ஆங்கு — அதில் சொல்லியிருக்கிறபடி; எரி ஓம்பி — அக்னி வளர்த்து யாகம் செய்து, கலியை விரட்டிவிட்ட வேதியர்கள் வாழ்கிற சிதம்பரம்' என்கிறார். கர்மா அதுவாகவே கலியை விரட்டவில்லை; இதன் பலனை ஈச்வரப் பிரசாதத்தாலேயே கலி ஓடிற்று என்பதை இதே பாட்டில், 'முற்ற வெண் திங்கள் முதல்வன் பாதமே பற்ற நின்றாரைப் பற்றா பாவமே' என்றார். பாவம் தான் கலி புருஷன். குமாரில பட்டருக்கு ஆயுள் முடிகிற சமயத்தில்தான் ஞானம் ஜலமாக, பாலாக இல்லாமல் அமிருதமாகவே, ஆசார்யாள் தந்த அத்வைத அமிருதமாகவே கிடைத்தது.

தாக சாந்திக்கு மூகர் எதைக் தேடிக் கொண்டார்? "அம்மா காமாக்ஷி! பரமசிவ ஜாயே — மகா மங்களமான பேரன்பு வடிவான ஈச்வரனுடன் இரண்டறக் கலந்திருக்கும் தாயே! ஸம்ஸார தாபத்தில் கொதிக்கிற நான் உன் மகா குளிர்ச்சியான திருவடி நிழலைத்தான் தேடுகிறேனம்மா" என்கிறார். 'பதாம் போஜச் சாயாம்' — 'இணையடிக் கமலங்களின் நிழலை' என்று நேர் அர்த்தம்.

'ஈசன் எந்தை இணையடி நீழலே' என்று இதையே அச்சடித்தாற்போல் அப்பர் ஸ்வாமிகள் சொல்கிறார். எந்த சந்தர்ப்பத்தில் இதைச் சொன்னார்? மூகர் ரூபகமாக (Symbolic) ஸம்ஸாரத்தைக் கொளுத்தும் சூரியன் என்றார். அப்பர் வாஸ்தவமாகவே (Factual) சுண்ணாம்புக் காளவாய்க்குள் இருந்து கொண்டு இப்படிப் பாடினார்.

ஜைன மதத் தலைவராக இருந்த அப்பர் சைவத்துக்கு மாறி விட்டார் என்றதும், ஜைனனாக இருந்த பல்லவ ராஜா அவரைச் சுண்ணாம்புக் காளவாய்க்குள் போடும்படி ஆக்ஞையிட்டான். அப்படியே செய்த ராஜ சேவகர்கள், "சிவன், சிவன் என்றீரே, இப்போது எப்படி இருக்கிறது சொல்லும்" என்று பரிகாசம் செய்தனர்.

இரண்யகசிபு செய்த குரூர தண்டனைகள் பிரஹ்லாதனைத் தொடாத மாதிரி, அப்பருக்கும் ஈச்வராநுக்ரஹத்தால் சித்திரஹிம்சை எதுவுமே தெரியவில்லை. தன்னிடம் கேலியாகக் கேட்டவர்களிடம் கோபமேயில்லாமல், "எப்படியிருக்கிறதா? ஈசன் எந்தை இணையடி நிழல் எப்படி ஒரே குளிர்ச்சியாக இருக்குமோ அப்படி இருக்கிறது. அது இந்திரிய அதீதமானது, உங்களுக்குப் புரியாது. உங்களுக்குப் புரிகிற மாதிரி சில இந்திரிய சுகங்களை வரிசையாகச் சொல்கிறேன், எண்ணிக் கொள்ளுங்கள்: முதலில் பரம சுஸ்வரமான வீணாகானம் — மாசில் வீணை; அப்புறம் பூரண சந்திரன் — மாலை மதியம்; அப்புறம் ஜிலுஜிலு என்று அடிக்கும் தென்றல் — வீசு தென்றல்; இன்னும், வசந்த காலத்தில் எங்கு பார்த்தாலும் கம்மென்று பூத்து நிற்கிற புஷ்பங்களின் சுகந்தம் — வீங்கு இளவேனில்; கடைசியாக, தேனின் ரசமும், அதற்காகக் கூட்டம் கூட்டமாக வரும் வண்டுகளின் ரீங்காரமும் சேர்ந்த தாமரைப் பொய்கை — மூசு வண்டு அறை பொய்கை. இத்தனை இனிமைகளையும் ஒன்று கூட்டினால் கிடைக்கிற ஈசன் இணையடி நிழலின்பத்தை இதோ இந்தக் கொதிக்கிற காளவாய்க்குள் அநுபவித்துக் கொண்டு ஆனந்தமாக இருக்கிறேன்" என்றார்.

அந்த ஈசனின் அவதாரமான ஆசார்யாளின் இணையடிகளைத் தரிசனம் செய்து கொண்டே, தேக சிரமம் கொஞ்சம்கூடத் தெரியாமல் குமாரில பட்டர் நெருப்பில் கருகிப் பிராணத் தியாகம் செய்தார்.

ஞான பண்டித முருகனின் அவதாரமானவருக்குப் பக்தியும் ஞானமும் தெரியாதா? ஆனாலும் பௌத்தர்கள் வெறும் ஞான மார்க்கத்தை மட்டும் சொன்ன போது, தாம் அதில் கொஞ்சத்தை எடுத்துக் கொண்டால்கூட, அவர்களுக்கு இடம் கொடுத்துப் போகும்; இதனால் ஜனங்களை வைதிகத்துக்குத் திருப்பச் சிரமப்படும் என்பதால் 'ஞானமும் வேண்டாம், ஸ்வாமியும் வேண்டாம், கர்மாவே போதும்' என்று மட்டும் அடித்துச் சொன்னார். நடுவிலே இப்படி அவர் ஒரு வழி போட்டதால்தான் அப்புறம் ஆசார்யாள் கர்மம், ஞானம் இரண்டையும் சொல்ல முடிந்தது.

(தொடரும்)

1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள் கட்டுரைகளிலிருந்து தொகுத்தது.

### பல் வைத்தியர்கள் கூறுகிறார்கள்:

# தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி, ஈறுகளைத் தேய்த்துக் கொடுத்தால், ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் தடுக்கலாம்.

## போர்ஹென்ஸ் பற்பசையைத் தவறாமல் உபயோகிப்பவர்கள் தாங்களாகவே கூறுகிறார்கள்:

"இப்பொழுது எனக்கு வயது இருபது. நான் பனிரெண்டு வயது முதலே போர்ஹென்ஸ் உபயோகித்து வருகிறேன். முதன் முதலாக போர்ஹென்ஸ் உபயோகிக்கத் தொடங்கியபோது, என் ஈறுகளுக்கு சிறிது தொல்லை ஏற்பட்டது. ஆனால் இப்போது அது சரியாகிவிட்டது: தொல்லை ஏதும் இல்லை... முதலில் நான் இரவில் பற்களைத் துலக்குவதில்லை. இரவில் 10 மணிவரை படிப்பது வழக்கம். அப்போது தினமும் உங்கள் விளம்பரம் 'ஒரு புதிய பழக்கத்தை நினைவுறுத்தும்'"

(கையொப்பம்)
எஸ். மித்தல், பி.ஏ. (எலெக்ட்ரிகல்),
பாட்டியாலா.

"நான் புகை பிடிப்பவன் அல்ல. எனினும், ஓர் ஆண்டுக்கு முன்பு, என் பற்கள் மஞ்சளாக இருப்பதைக் கவனித்தேன். முப்பது ஆண்டுகளாக போர்ஹென்ஸ் உபயோகித்து வரும் என் தந்தை, நான் உபயோகித்து வந்த பற்பசையை விட்டு விட்டு, போர்ஹென்ஸுக்கு மாற்றிக் கொள்ளச் சொன்னார். அப்படியே செய்தேன்; என்ன ஆச்சரியம்! இப்பொழுது என் பற்கள் வெண்மையாகப் பளிச்சிடுகின்றன. அதற்குக் காரணம் உங்கள் போர்ஹென்ஸ் பற்பசைதான். நீங்கள் கூறும் சிறப்புகள் அனைத்தும் அதில் உள்ளன. **ஒரு பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை** அது என்பது மட்டுமே போதும் அதன் சிறப்புக்கு!

(கையொப்பம்) எஸ்.எஸ். சட்டர்ஜி,
கோயம்புத்தூர்.




(மேற்கண்ட சான்றிதழ்களின் புகைப்பட நகலை ஜெப்ரி மேனர்ஸ் & கம்பெனி லிமிடெட்டின் எந்த அலுவலகத்திலும் காணலாம்.)
சீரான பற்பராமரிப்புக்கு இரவிலும் காலையிலும் போர்ஹென்ஸ் பற்பசை மற்றும் போர்ஹென்ஸ் டபிள்-ஆக்ஷன் டூத் பிரஷ் உபயோகியுங்கள்... உங்கள் பல் வைத்தியரையும் தவறாமல் கண்டு வாருங்கள்.

**இலவசம்!** "உங்கள் பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்னும் விவரமான வண்ணப் புத்தகம்.
இப் புத்தகம்* பெற (தபால் செலவுக்காக) 25 பைசா தபால் தலையுடன் இக் கூப்பனை "மேனர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய்-1" என்னும் முகவரிக்கு அனுப்புக.
பெயர் ______________________ வயது ______ K-6
முகவரி ______________________
*எந்த மொழியில் வேண்டுமோ, அதன் கீழ் கோடிடவும். ஆங்கிலம், இந்தி, மராத்தி, குஜராத்தி, உருது, பஞ்சாபி, வங்காளி, அஸ்ஸாமி, தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம்.

**போர்ஹென்ஸ்** – பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை

129 F-182 TAM




### பதினெட்டாம் அத்தியாயம்

## தமக்கையும் தம்பியும்

அன்று சூரியாஸ்தமனம் ஆன பிறகு வானமா தேவி தன்னுடைய விலை மதிப்பில்லா ஆபரணங்கள் பத்திரமாக வைக்கப்பட்டிருந்த அறையில் வெள்ளிப் பெட்டிகளையும் தங்கப் பெட்டிகளையும் திறந்து எதையோ தேடிக் கொண்டிருந்தாள்.

திடீரென்று, "அக்கா! என்ன தேடுகிறாய்?" என்ற குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

அவளுக்குத் தெரியாமல், ஓசை உண்டாக்காமல், அந்த அறைக்குள் நெடுமாறன் பிரவேசித்திருந்தான்.



அவனைக் கண்டதும் வானமாதேவியின் திகைப்பு அதிகமாயிற்று.

''அக்கா! என்ன தேடுகிறாய்?'' என்று நெடுமாறன் மறுபடியும் கேட்டுவிட்டு ஏறிட்டுப் பார்த்தான்.

மறுமொழி சொல்ல முடியாமல் வானமாதேவி கொஞ்சம் தடுமாறிவிட்டு, ''தம்பி! நீ எப்போது இங்கே வந்தாய்?'' என்றாள்.

''நான் வந்து சிறிது நேரமாயிற்று. ஒரு வேளை இந்தக் கத்தியைத்தான் தேடுகிறாயோ என்று கேட்பதற்காக வந்தேன்!'' என்று சொல்லிக் கொண்டே பின்புறமாக மறைத்து வைத்துக் கொண்டிருந்த ஒரு சிறு கத்தியை நெடுமாறன் நீட்டினான்.

வானமாதேவி அந்தக் கத்தியை வெறித்துப் பார்த்தவாறு நின்றாள். அவளுடைய முகத்தில் முத்து முத்தாக வியர்வைத் துளிகள் துளித்து நின்றன.

''அக்கா! என்னைக் கத்தியால் குத்திக் கொல்வதென்று முடிவாகத் தீர்மானித்திருந்தாயால், இதை வாங்கிக் கொண்டு இப்போதே அந்தக் காரியத்தைச் செய்துவிடு! வீரத்துக்குப் பெயர் போன பாண்டிய குலத்திலே பிறந்து, பல்லவ குலத்திலே வாழ்க்கைப்பட்ட வானமாதேவி தன் அருமைச் சகோதரனைத் தூங்கும் போது கத்தியால் குத்திக் கொல்வது அழகாயிராது. பிறந்த குலம், புகுந்த குலம் இரண்டுக்கும் அதனால் இழுக்கு உண்டாகும்!''

பரிகாசமும் பரிதாபமும் கலந்த குரலில் நெடுமாறன் கூறிய மேற்படி வார்த்தைகளைக் கேட்ட வானமாதேவியின் உள்ளம் என்ன பாடுபட்டது என்பதைச் சொல்ல முடியாது. ஒரு பக்கம் அவமானமும் ஆத்திரமும் அவளைப் பிடுங்கித் தின்றன; மற்றொரு புறம் கோபமும் ஆத்திரமும் பொங்கின.

எவ்வளவோ முயன்றும், அவளுடைய வாயிலிருந்து ஒரு வார்த்தையும் வரவில்லை. நெடுமாறன் மேலும் கூறினான்:

"அல்லது ஒரு வேளை விஷங் கொடுத்து என்னைக் கொல்லுவதாகத் தீர்மானித்திருந்தாயானால், கொடுக்கிற விஷம் நிச்சயமாய்க் கொல்லக்கூடியதுதானா என்று தெரிந்து கொண்டு கொடு. நீ எவ்வளவோ சிரமப்பட்டு வாங்கி வைத்திருந்த விஷத்தை அரண்மனைத் தோட்டத்தில் உள்ள மான் குட்டிக்குக் கொடுத்துப் பார்த்தேன். அது உயிரை விடும் வழியாகக் காணப்படவில்லை. முன்னைவிட அதிகமாகவே துள்ளி விளையாடுகிறது!"

நெடுமாறனுடைய வார்த்தை ஒவ்வொன்றும் விஷந் தோய்ந்த அம்பைப் போல் வானமாதேவியின் நெஞ்சில் பாய்ந்து அவளைக் கொல்லாமல் கொன்றது.

அந்த வேதனையை மேலும் பொறுக்க முடியாதவளாய், தயங்கித் தயங்கி, "தம்பி! இதெல்லாம் என்ன பேச்சு? நானாவது உன்னைக் கொல்லவாவது?...." என்றாள் வானமாதேவி.

"அக்கா! பல்லவ குலத்தில் வாழ்க்கைப்பட்டதற்குப், பொய்யும் புனைசுருட்டும் கற்றுக் கொண்டுவிட்டாயா? நேற்றிரவு புவனமகாதேவி



யிடம் யோசனை கேட்கப் போனாயே? அவர் இந்த யோசனைதான் சொல்லிக் கொடுத்தாரா?'' என்றான் நெடுமாறன்.

வானமாதேவிக்கு அவளுடைய ஆத்திரத்தையெல்லாம் பிரயோகிக்க இப்போது ஒரு வழி கிடைத்தது.

கடுமை நிறைந்த குரலில், ''நான் நினைத்தபடியே ஆயிற்று! இதையெல்லாம் உனக்குச் சொன்னது அந்தச் சோழ நாட்டுப் பெண்தானே?'' என்றாள்.

''அந்தப் பேதைப் பெண் மீது உன் ஆத்திரத்தைக் காட்ட வேண்டாம், அக்கா! அவள் அதற்குப் பாத்திரமில்லாதவள். சற்று முன்னால் அவள் என்னிடம் இதைப் பற்றிப் பிரஸ்தாபித்தது உண்மைதான். ஆனால், இந்தக் கத்தி



காணாமற் போனது இன்றைக்கல்லவே? இரண்டு நாட்களாக இதை நீ தேடுகிறாய் அல்லவா?''

வானமாதேவி மீண்டும் சிறிது நேரம் திகைத்து நின்றுவிட்டு, ''சமணசித்தர்களால் அறிய முடியாதது ஒன்றுமில்லை போலிருக்கிறது'' என்றாள்.

''ஆனால், உன்னுடைய மனத்தில் உள்ளதை அறிவதற்குச் சித்தர்களின் சக்தி தேவையில்லை, அக்கா! பாவம்! நீ கள்ளங் கபடு அறியாதவள். வள்ளுவர் பெருமான்,

'அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்'

என்று சொன்னது உன்னைப் பற்றியே சொன்னதாகத் தோன்றுகிறது. உன் மனத்திலுள்ள எண்ணத்தை உன்னுடைய முகமே எனக்குக் காட்டிவிட்டது. மேலும், நான் கண் குருடாகவும், காது செவிடாகவும் பிறக்கவில்லையே? இந்த அரண்மனைக்கு வந்ததிலிருந்து என் கண்களையும் காதுகளையும் திறந்து வைத்துக் கொண்டுதான் இருக்கிறேன். உன் இடுப்பிலே இந்தக் கத்தியை நீ சதா செருகி வைத்துக் கொண்டிருப்பதையும் பார்த்தேன். அதை நீ ஒரு தடவை ஞாபகமறதியாகத் தரையில் வைத்தாய். உனக்குத் தெரியாமல் அதை எடுத்துக் கொள்வதில் எனக்கு எவ்வித சிரமமும் ஏற்படவில்லை.''

'' ஆகா! எப்பேர்ப்பட்ட அசடு நான்?'' என்று முணுமுணுத்தாள் வானமாதேவி.

''நீ அசடு இல்லை, அக்கா! ஆனால், இந்தக் காரியம் செய்வதற்கு உன் மனம் இடம் கொடுக்கவில்லை. அதனால்தான் மனத்தில் உள்ளதை மறைக்கத் தெரியாமல் பைத்தியம் பிடித்தவள் போல் அலைந்தாய்! ஆஹா! பத்து வருஷங்களுக்கு முன்பு நீயும் நானும் மதுரை அரண்மனையில் இருந்த போது, என் பேரில் நீ எவ்வளவு பிரியமாயிருந்தாய்? அந்த நாளை நினைத்தாலே எனக்கு மெய் சிலிர்க்கிறது. நான் விவரமறியாக் குழந்தையாயிருந்த போதே, என் அன்னை இறந்து போனாள். பிறகு அரண்மனையில் சின்ன ராணி வைத்ததே சட்டமாயிருந்தது. தாயின் அன்பை அறியாத எனக்கு நீயே தமக்கையும் தாயுமாக இருந்து வந்தாய். வெகு காலம் வரையில் நீ என் சொந்தத் தமக்கை என்றே எண்ணிக் கொண்டிருந்தேன். உன் கல்யாணத்தின்போது தான், நீ என் மாற்றாந் தாயின் மகள் என்று அறிந்து கொண்டேன்.''

வானமாதேவியின் கண்களிலிருந்து தாரை தாரையாய்க் கண்ணீர் பொழியலாயிற்று.

'' நெடுமாறா! அதையெல்லாம் இப்போது எதற்காக நினைவூட்டுகிறாய்?'' என்று விம்மலுக்கிடையே வானமாதேவி கேட்டாள்.

'' அவ்வளவு அன்பாக என்னிடம் இருந்தாயே? அப்படிப்பட்டவள் எவ்வாறு இவ்வளவு கொடூர சித்தமுடையவள் ஆனாய்? என்னைக் கத்தியால் குத்தியோ விஷங் கொடுத்தோ கொல்லுவதற்கு எவ்வாறு துணிந்தாய்?'' என்றான் நெடுமாறன்.

''தம்பி! என்னை மன்னித்துவிடு! அவர் யுத்தத்துக்குப் புறப்படும்போது இவ்விடத்துப் பொறுப்பை என்னிடம் ஒப்புவித்துவிட்டுச் சென்றார். உன்னால் ஏதாவது இங்கே அபாயம் நேரலாம் என்று எச்சரித்தார். அப்படி நேராமல் பார்த்துக் கொள்வதாக நான் வாக்குக்

# செழுமையான நீண்ட கேசம்-சின்னஞ்சிறு வாதுமை வழங்கிய சீதனம்" என்கிறார் எக்ஸ்-போர்ட் ஹவுஸ் நிர்வாகி அனிடா ராபின்ஸ்




Creative Unit A 1906

அதனால்தான், பழங்கால விஜய நகர சாம்ராஜ்யத்து ராணிகளின் கூந்தல் கணுக்கால் வரை நீண்டிருந்ததாம். தேங்காய், நிலக்கடலை, ஆமணக்கு ஆகியவற்றைவிட வாது-மையின் ஊட்ட குணங்-கள் மிக மேம்பட்டதென அவர்கள் அறிந்திருந் தார்கள்.

இன்று ரோமம் உதிர்-வதைத் தடுத்து உங்கள் கேசத்தை பளபளக்கும். ஆரோக்கியமுடன் வைத்திருக்க வாதுமையின் அதே ஊட்டகுணங்களை நீங்கள் பயன்படுத்த முடியும். இரவிலும் காலையிலும் லியூர் ஆல்மண்ட் ஹேர் ஆயிலைத் தலையில் தேய்த்து உள்ளிறக்குங்-கள். இரவிலே அது மயிர்க்-கால்களுக்கு ஊட்ட-மளித்து ஊக்குவிக்கும். பகலிலே உங்கள் கேசத்தைப் படிமான-முடன் பாங்காக வைத்திருக்கும். நல் வனப்புத் தோற்றத்தையும், ஆரோக்கியமான கேசத்தையும் விரும்பும் ஆண் பெண்கள் யாவருக்கும் அத்தியாவ-சியமானது இனிய மண-மூட்டப்பட்ட லியூர் ஆல்மண்ட் ஹேர் ஆயில்.

என் கூந்தலழகுக்குக் கவர்ச்சியூட்டுகிறது லியூர்–ஆரோக்கிய மெருகுமிளிர அதனை வைத்திருப்பது லியூர் ஆல்மண்ட் ஹேர் ஆயில்.

**லியூர்**

# இந்த இருவரிலே எவரைப் போல் இருக்கிறீர்கள் நீங்கள்?

**பதினைந்தே நாட்களில் ஒரு அழகு ஆடவரின் உறுதிமிக்க உடலைப் பெறுங்கள்—இல்லையேல் பணம் தராதீர்கள்!**

உங்கள் படுக்கை அறையின் கண்ணாடியில் உங்களைப் பார்த்து, உங்களுடைய உடல்வளத்தைப் பற்றி உங்களை நீங்களே ஏமாற்றிக் கொள்ளாதீர்கள். மற்ற ஆடவர்கள் உங்களைக் கண்டு பொறாமைப் படும் அளவுக்கு, பெண்கள் பார்த்து வியந்து பாராட்டும் அளவுக்கு உங்கள் உடல் உண்மையிலேயே உறுதியாக இருக்கிறதா? அப்படியெனில் உங்களைப் பிரமிப்பில் ஆழ்த்தும் செய்தி இதோ. புதிதான, புரட்சிகரமான பாடி பில்டர், நீங்கள் என்றும் நாடி விரும்பும் உடல் உறுதியை சில வாரங்களிலேயே உங்களுக்குத் தருவதற்கெனவே டிசைன் செய்யப்பட்டது. இரும்பை ஒத்த உறுதி மிக்க தசைகளை, வலுவான முழு வளர்ச்சியடைந்த புயங்களை, திடபலம் திகழும் இடுப்பை உடையவராக உங்களை கற்பனை செய்து பாருங்கள். இப்போது இக்கனவு நனவாக முடியும். இந்தப் புது உபாயமே புல் ஒர்க்கர் என்று அழைக்கப்படுகிறது. வழக்கமான உத்திகளை விட அதிக வேகமாக உங்கள் உடலில் உறுதியையும் உடல் வன்மையையும் புகுத்தும் பொருட்டு ஐஸோடோனிக்/ஐஸோமெட்ரிக் முறைகளை அனுசரித்து விஞ்ஞான முறைப்படி செயலாற்றுவதே இந்த புல்ஒர்க்கர். பதினைந்தே நாட்களில் இந்த உண்மையை நீங்களே கண்டு கொள்வீர்கள்.

## புதிய துல்லியமான பவர் மீட்டர்

என்றும் நாளுக்கு நாள் உங்கள் தசைவலிமை வளருவதை நீங்களே கண்கூடாகக் காணலாம்.

**புல்ஒர்க்கர் மீது பொழிந்த புகழ் மாலைகளில் சில இதோ.**

"ஒரே மாதத்தில் என் மார்பு 5.2 செ.மீ. பெருகியது. என் உடற்பாகங்கள் 1.3 செ.மீ. லிருந்து 2.6 செ.மீ. வரை அதிகமாயின. புல்ஒர்க்கர் அற்புதமானது" (ஜி.டி. கலிம்போங்)

"நீங்கள் செய்த வாக்குறுதிகள் யாவும் உண்மையே. உண்மையில் அதன் பெறுபேறுகளை [illegible] என் உடல் உறுதி [illegible] [illegible] என் வாழ்க்கையில் இந்த மாற்றத்தை [illegible]" (கே.எஸ்.ஜி. காஷ்பூர்).

இந்த ஆடவர்கள் போல் எத்தனையோ ஆடவர்களுக்கு புல்ஒர்க்கர் கேள்விப்படாத அற்புதத்தை அளித்திருக்கிறது. உங்களுக்கும் நன்மைகளை விளைவிக்கும். இந்த இலவசச் சலுகையைப் பயன்படுத்தி அடையும் நன்மைகளை நீங்களே பாருங்கள்.

c. Mail Order Sales Pvt. Ltd. 15 Mathew Road, Near Opera House, Bombay 400 004

## 14 நாட்கள் வீட்டில் பரீட்சை செய்ய கூப்பன்

புல்ஒர்க்கர் சர்வீஸ்,
மேதா மஹால், 15, மேத்யூ ரோடு, பம்பாய்-400 004.

தயவு செய்து 14 நாள் பரிசோதனைக்கு புல்ஒர்க்கர்-3ஐ விரைவில் அனுப்பவும். பலனைக் திருப்தி அளிக்காவிட்டால் 14 நாட்களுக்குள் அனைத்தையும் திருப்பித் தந்து முழுத் தொகையையும் உடனே மீட்பேன்.

உகந்த கட்டத்தினுள் இவ்விதம் ☑ குறியிடுக

☐ வி.பி.பி. மூலம் புல்ஒர்க்கர் 3 என்னைச் சேர்ந்ததும் தபால்காரரிடம் நான் ரூ. 39 டெபாசிட்டும் அத்துடன் சாக்குப்போக்குச் செலவுக்கென ரூ. 8 ம் சேர்த்து செலுத்துவேன். மேலும் 14 நாட்களுக்குப் பிறகு கருவியை நான் வைத்துக் கொண்டால் மாதத் தவணை ரூ. 19 வீதம் இன்னும் 13 மாதங்களுக்குச் செலுத்த சம்மதிக்கிறேன். ☐ இத்துடன் வங்கி பணவிடை (செக்)/கா்சோலை (பாங்க் டிராப்ட்)/இந்திய அஞ்சல் ஆணை (இ.போ.ஆ.) ரூ. 46க்கு இணைத்துள்ளேன் மேற்கூறிய அதே மாதத் தவணைத் திட்டத்தின்படி. ☐ பண ஆணை மூலம் (ப.ஆ.) ரூ. 46 (பண ஆணை ரசீது நம்பர்..................தேதி..................) அனுப்பியுள்ளேன், மேற்கூறிய அதே மாதத் தவணைத் திட்டத்தின்படி.

நீங்கள் உடனடியாக ஒரே தொகையாகச் செலுத்தி ரூ. 32 சேமியுங்கள்.

வி.பி.பி. மூலம் புல்ஒர்க்கர் 3 என்னைச் சேர்ந்ததும் தபால்காரரிடம் நான் ரூ. 263 செலுத்துவேன். ☐ இத்துடன் வங்கி பண விடை/கா்சோலை/இந்திய அஞ்சல் ஆணை ரூ. 263க்கு இணைத்துள்ளேன் ☐ பண மூலம் ரூ. 263 (பண ஆணை ரசீது நம்பர்..............தேதி..............) மேற்கூறிய அதே 14 நாளில் திருப்பி அனுப்பும் சலுகையுடன் அனுப்பியுள்ளேன்.

KL-10

கையொப்பம்.................................................வயது.................

(18 வயதிற்குள் இருந்தால் பெற்றோர்களின்)

பெயர் ..........................................................................

முகவரி ..........................................................................

**இப்போது ரூ. 39 மட்டுமே பாக்கித் தொகை எளிதான தவணை முறைகளில்**

**இலவசம்** 5 நாளைக்குள் ஆர்டர் கொடுக்கிறதாயிருந்தால் உளக்க மூட்டும் 4 வர்ணப் படங்களோடு கூடிய 20-ம் நூற்றாண்டின் காலண்டரும் இலவசம்

கொடுத்தேன். ஆனால், அவருக்கு வாக்குக் கொடுத்தபோது நீ இவ்விதம் சதி செய்யப் போகிறாய் என்று கனவிலும் கருதவில்லை!'' என்று சொல்லிவிட்டு மறுபடியும் கண்ணீர் விடத் தொடங்கினாள்.

''அக்கா! நீ கண்ணீர் விடுவதைப் பார்க்க எனக்குச் சகிக்கவில்லை. நான் என்ன சதி செய்தேன் என்பது எனக்கே தெரியவில்லை. நீ உன் பதிக்கு என்ன வாக்குக் கொடுத்தாய் என்பதையும் நான் அறியேன். ஒருவேளை என்னைக் கத்தியால் குத்திக் கொன்றுவிடுவதாக வாக்குக் கொடுத்திருந்தாயானால், அதைப் பற்றிக் கவலைப்படாதே! இதோ என் மார்பைக் காட்டச் சித்தமாயிருக்கிறேன்; உன் வாக்கை நிறைவேற்று!'' என்று சொல்லியவண்ணம் நெடுமாறன் கத்தியை வானமாதேவியின் கையில் கொடுப்பதற்காக நீட்டிக் கொண்டே, தன் மார்பையும் காட்டினான்.

''தம்பி! பெருந் துக்கத்தில் ஆழ்ந்திருக்கும் என்னோடு ஏன் விளையாடுகிறாய்? நீ என்ன உத்தேசத்தோடு இப்போது வந்தாயோ, அதைச் சொல்லு!'' என்றாள் சக்கரவர்த்தினி.

''அக்கா! நான் விளையாடவில்லை, உண்மையாகவே சொல்லுகிறேன். உன்னைப் பற்றி நினைக்க நினைக்க எனக்கு எவ்வளவோ கர்வமாயிருக்கிறது. பாண்டியர் குலத்திலே பிறந்த பெண் இவ்வளவு பதிபக்தி உடையவளாயிருப்பது மிகப் பொருத்தமானதுதான். பாண்டியர் குலதெய்வமான மீனாக்ஷி தேவி, பெற்ற தகப்பனை தக்ஷனை நிராகரித்துவிட்டுச் சிவபெருமானே கதி என்று வந்துவிடவில்லையா? பிறந்த வீட்டாரால் புருஷனுக்கு ஏதேனும் கேடு நேர்வதாயிருந்தால், புருஷனுடைய நன்மைக்கான காரியத்தைத் திடமாகச் செய்வதுதான் பாண்டிய குலப் பெண்களின் மரபு. ஆனால், என்னால் என்ன கேடு வரும் என்று நீ சந்தேகப்பட்டாய்? எந்தவிதத்தில் நான் உன்னுடைய மனவெறுப்புக்குப் பாத்திரமானேன்? அதை மட்டும் சொல்லிவிட்டு இந்தக் கத்தியை என் மார்பில் பாய்ச்சிவிடு!'' என்றான் நெடுமாறன்.

''தம்பி! என் வாயினால் அதைச் சொல்லியே தீர வேண்டுமா? உன்னோடு அழைத்து வந்திருக்கும் பாண்டிய சைனியத்தைக் கொண்டு காஞ்சி நகரையும் பல்லவ சிம்மாசனத்தையும் கைப்பற்ற வேண்டுமென்று நீ சதி செய்யவில்லையா?''

''இம்மாதிரி துரோக சிந்தை எனக்கு ஏற்பட்டிருப்பதாக உனக்கு ஏன் சந்தேகம் வந்தது? யார் சொன்னார்கள், அக்கா?''

''யார் சொல்ல வேண்டும்! உன் முகத் தோற்றம், நடவடிக்கை, பேச்சு எல்லாம் சந்தேகத்தை உண்டாக்கின. 'வாதாபிக்குப் போவது சந்தேகம்' என்று நீயே சொன்னாய். 'இந்த அரண்மனையிலே அடைக்கலம் தந்தால் இங்கேயே இருந்துவிடுகிறேன்' என்று கூறினாய். எப்போது பார்த்தாலும் ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் உள்ளவன் போல் காணப்பட்டாய். இதையெல்லாம் தவிர, நள்ளிரவில் சமண சித்தர் கூட்டத்துக்குப் போய் வந்தாய். சமணர்களுடைய சூழ்ச்சியில் நீ அகப்பட்டுக் கொண்ட பிறகு நான் சந்தேகப்படுவதற்கு இன்னும் என்ன வேண்டும்?''

''அக்கா! வீணாகச் சமணர்களின் மீது பழி சொல்ல வேண்டாம். அவர்கள் வருங்கால நிகழ்ச்சிகள் சில



வற்றை எனக்குக் காட்டியது உண்மையே. ஆனால், அவற்றிலிருந்து நான் முடிவு செய்தது நீ நினைத்ததற்கு நேர்மாறானது. மாமல்ல சக்கரவர்த்தி இங்கு இல்லாத சமயம் பார்த்து அவருடைய தலைநகரையும் இராஜ்யத்தையும் அபகரித்துக் கொள்ள நான் எண்ணவில்லை. 'மாமா! மாமா!' என்று சொல்லிக் கொண்டு என்னை ஓயாமல் சுற்றித் திரியும் குழந்தை மகேந்திரனுக்குத் துரோகம் செய்யவும் நான் எண்ணவில்லை. ஆனால், இந்த அரண்மனைக்கு வந்தது முதலாக எதைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தேனென்றால், எனக்கு நியாயமாக உரிய பாண்டிய இராஜ்யத்தையும் துறந்து, உலக வாழ்க்கையையும் துறந்து திகம்பர சமணனாகிவிடலாமா என்றுதான்!''

''தம்பி! இது என்ன விபரீத யோசனை?'' என்று வானமாதேவி திடுக்கிட்டுக் கேட்டாள்.

---

''நம் பையனுக்கு எப்படி 'பூஜ்யம்' மார்க்தான் போட்டார் என்று அவன் டீச்சரைப் பார்த்துக் கேட்டீர்களா?''

''கேட்டேன். அதற்குக் கீழே போட அவரால் முடியவில்லையாம்!'' - முரளி



"ஏது விபரீத யோசனை, அக்கா! ஆறறிவுள்ள மனிதர்களைப் புலிகளாகவும் ஓநாய்களாகவும் ஆக்கி, இலட்சக் கணக்கான ஜனங்கள் ஒருவரையொருவர் கொன்று மடிவதற்குக் காரணமாயிருக்கும் இராஜ்ய பாரத்தை ஏற்றுக் கொள்வது விபரீத யோசனையா? அல்லது புழு பூச்சிகளின் உயிருக்குக்கூட ஊறு செய்யாத ஜீவகாருண்ய மதத்தைச் சேர்ந்து கொல்லா விரதம் மேற்கொண்டு வாழ்வது விபரீத யோசனையா?"

"தம்பி! நீ மிகப் படித்தவன். உன்னோடு தத்துவ விசாரணை செய்வதற்கு வேண்டிய தகுதியற்றவள் நான். ஆயினும் நீ சமண - சந்நியாசி ஆகிற யோசனை விபரீதமானதுதான். அதை நினைக்கும் போதே எனக்கு என்னவோ செய்கிறது!"

"என்னை நீ கத்தியால் குத்திக் கொன்றாலும் கொல்லுவாய். ஆனால், நான் திகம்பர சமணன் ஆவதை மட்டும் விரும்பமாட்டாய். போனால் போகட்டும். அந்தக் கவலை உனக்கு வேண்டாம். நான் திகம்பரசமணன் ஆகப் போவதில்லை. அந்த யோசனையை நேற்றுச் சாயங்காலத்தோடு கைவிட்டு விட்டேன்."

"பின்னே, என்ன செய்ய உத்தேசித்திருக்கிறாய், தம்பி!" என்று அடங்காத ஆர்வத்துடன் பல்லவ சக்கரவர்த்தினி கேட்டாள்.

"நாளைய தினம் மதுரைக்குத் திரும்பிப் போகிறேன், அக்கா! ஒருவேளை எனக்கு அந்தச் சிரமம் கொடுக்காமல் நீ என்னைக் கொன்று விடுவதாயிருந்தால்..." என்று கூறி மீண்டும் தன் கையிலிருந்த கத்தியை நீட்டினான்.

**வா**னமாதேவி அவன் அருகில் வந்து அந்தக் கத்தியைப் பிடுங்கித் தூர எறிந்தாள். பிறகு, நெடுமாறனுடைய இரு கரங்களையும் பிடித்துக் கொண்டு கண்களில் நீர் ததும்ப, குரல் தழுதழுக்க, "நெடுமாறா! இந்தப் பைத்தியக்காரியைத் தண்டித்தது போதும். இனிமேல் அந்தப் பேச்சை எடுக்காதே; உன் பேரில் சந்தேகப்பட்டது பெரிய குற்றந்தான். என்னை மன்னித்துவிடு!" என்றாள்.

"உனக்கு இவ்வளவு மனக் கலக்கத்தை அளித்ததற்காக நான்தான் உன்னிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும். என்னை மனப் பூர்வமாக மன்னித்து ஆசீர்வாதம் செய், அக்கா!" என்றான் நெடுமாறன்.

"கடவுள் அருளால் உனக்குச் சகல மங்களங்களும் உண்டாகட்டும்! சீக்கிரத்தில் உனக்குத் தகுந்த பத்தினியை மணந்து கொண்டு நெடுங் காலம் பாண்டிய சிம்மாசனத்தில் வீற்றிருப்பாய்!"

"அக்கா! எனக்குத் தகுந்த பத்தினியைத் தேடிக் கொண்டுதான் நான் காஞ்சி நகருக்கு வந்தேன். அவளைப் பார்ப்பதற்காகவே இத்தனை நாளும் இங்கே தாமதித்தேன். நேற்றுச் சாயங்காலம் அவளை உன்னுடைய அரண்மனைத் தோட்டத்தில் சந்தித்துப் பேசிய பிறகுதான் என் உள்ளம் தெளிவடைந்தது. உன் ஆசீர்வாதம் பலித்து, நான் பாண்டிய சிம்மாசனம் ஏறினால் அந்தப் பெண்தான் என் பட்டமகிஷியாயிருப்பாள்!" என்றான் நெடுமாறன்.

(தொடரும்)

---

"நான்
டியாராவிற்கு
மாறிவிட்டேன்"

என்கிறார் பம்பாயின்
அழகு ராணி
குமாரி
சித்ரா சுந்தரம்

"...டியாரா
டால்க்கின்
தனிச் சிறப்பு
வாய்ந்த
இனிய மலரின்
நறுமணம்
என்னைப் பெரிதும்
கவர்கிறது"









ARMS-HC-18-140 TAM



• நகர்வலம் •

அடிமை யூசுப், யூசுப் கானாகிறான். ஒரு சமயம் டில்லியிலிருந்து வந்திருந்த மல்லனுடன் போரிட்டு அவனை மல்லாத்துகிறான். பாமினி அரசுக்கு உட்பட்ட தெலுங்கு ஜில்லாக்களில் ஏற்பட்ட குழப்பத்தை அடக்குவதற்கு யூசுப் கானை ஒரு படையுடன் அனுப்புகிறார் மன்னர் முகமது. போர் வீரர்களை நடத்திச் சென்ற முறை, திட்டமிட்டுப் போரிட்டு வெற்றி கண்ட திறமை ஆகியவைகளைக் கண்ட சுல்தான் முகம்மது சில நகரங்களைப் பரிசாக (இனாம்) அளித்து வெறும் யூசுப் கானாக இருந்தவனை யூசுப் ஆதில்கானாக்கினார். அதிர்ஷ்டம் வரும்போது அடுக்கடுக்குத்தான் வரும்போலும். பீஜப்பூர் கவர்னர் கவான் துரோகியாகி விடவே, அவனைத் தொலைத்துவிட்டு அந்தப் பதவிக்கு யூசுப் ஆதில்கானை அமர்த்துகிறார் பீடார் மன்னர்.



# அடிமையாய் வந்தான் அரசனாய் உயர்ந்தான்

கான்ஸ்டாண்டிநோபிளைச் சேர்ந்த அரச குடும்பத்தில் ஒரு கொலைபாதகமான கொடிய பழக்கம். பட்டத்துக்கு உரிமையுடைய ஒரே ஓர் ஆண் குழந்தையைத் தவிர சுல்தானின் மற்ற ஆண் குழந்தைகளைக் கொன்று விடுவார்கள்! அப்படிக் கொல்வதற்காக ஒப்படைக்கப்பட்ட ஓர் அரச குமாரனைக் கொலை செய்யாமல் கடத்திப் பாரதத்துக்குக் கொண்டு வந்துவிடுகிறார்கள். பீடாரின் அரசனான சுல்தான் முகமதுவிடம் அடிமையாக விற்கப்படுகிறான் அந்தப் பரிதாபத்துக்குரிய அரச குமாரன் யூசுப்.

அழகு, ஆண்மை, வீரம், திறமை, சாகசம் ஆகியவைகளால் யூசுப், மன்னரின் மனதிலே இடம் பெற்று 'கான்' பட்டம் பெறுகிறான்.

- பீஜப்பூரிலுள்ள ஜலமந்திர். (பீஜப்பூரிலிருந்து 50 மைல் தொலைவில் புகழ்பெற்ற பாதாமி, பட்டடக் கல், அய்ஹோளி ஆகிய சிறப்பு மிக்க இடங்கள் உள்ளன.)
- கோல்கும்பட்டை எழுப்பிய ரம்பாவின் காதலர் முகமது ஆதில்ஷா.
- தங்கள் மூதாதையர் எழுப்பிய கட்டடங்களையெல்லாம் விடச் சிறப்பாகக் கட்ட நினைத்து முற்றுப் பெறாத நிலையில் உள்ள இரண்டாம் அலி ஆதில் ஷாவின் கல்லறை.
- ஜாமி மசூதி.
- ஜாமி மசூதியிலுள்ள தொழுகை புரியும் அலங்கார வளைவுக்கூடம்.
- சுற்றுலாக்காரர்களுக்குப் பீஜப்பூரின் டாக்கி இதுதான்.
- புகழ்பெற்ற கோல்கும்பஜ் - பொதுத் தோற்றம்.



நாளடைவில் பாமினி சுல்தான்களின் பிடி, பீடாரின் மீது குறையவே — பீடாரின் அதிக்கத்திலிருந்து பீஜப்பூரைத் தனிமைப் படுத்தித் தானே அதன் சுல்தானாக முடிவு செய்கிறான் யூசுப் ஆதில்கான். அதன் படியே 1489ல் தான் ஒரு சுதந்திரமான சுல்தான் என்று பிரகடனப் படுத்திக் கொண்டு யூசுப் ஆதில்ஷாவாகி, பள்ளி வாசல்களில் தன் பெயரையே குதபா ஓதும் படி ஆணையிடுகிறான். மராத்திய சர்தாரான முகுந்த ராவ் என்பவரின் தங்கையை மணந்து கொள்ளுகிறான்; துருக்கியின் அரசவையில் இறந்தவனாகக் கருதப்பட்டு இந்தியாவில் அடிமையாக விற்கப்பட்ட யூசுப் என்ற இளவரசனால் நக்காரத்தில் ஆதில்ஷாஹி வமிசம் ஸ்தாபிக்கப்படுகிறது. வமிசம் தழைக்க யூசுப்புக்கு இஸ்மாயில் என்ற ஒரு மகனையும் மூன்று பெண்களையும் பெற்றுத்



தருகிறாள் பூபூஜிகானும். முகுந்த ராவின் தங்கைதான் இந்த பூபூஜிகானும் — இந்துப் பெண்ணின் முஸ்லிம் பெயர். முஸ்லிம் அரச குடும்பங்களிலே வழக்கமாக உள்ள சூழ்ச்சிகள், கொலைகள், பதவிப் பறிப்பு எல்லாமும் அதில் ஷாஹி வம்சத்திலும் ஏராளமாக உண்டு. அதேபோல வீரத்துக்கும் சாகஸத்துக்கும் குறைவில்லை. அக்பரை அயர வைத்த வீராங்கனை சாந்த் பீபீ வாளேந்திப் போரிட்டிருக்கிறார் இந்தப் பீஜப்பூரிலே!

பசி வயிற்றைக் கிள்ளியது. வரலாற்றுச் சிந்தனை அறுபட்டது. பிற்பகல் மணி மூன்றாகப் போகிறது. இன்னும் பீஜப்பூர் வந்தபாடில்லை. அதிகாலை ஆறு மணிக்கு ரயிலில் உட்கார்ந்தது. அலுப்பும் வெறுப்பும் உடலை முறுக்கி எடுத்த வேளையில் ஒரு குரல் தேளாகக் காதில் பாய்ந்தது.

கௌசிகன்





''அதோ கோல் கும்பஜ்...! பீஜப்பூர் வந்துவிட்டது.''

நிமிர்ந்து உட்கார்ந்து வெறிச்சிட்டுக்கிடந்த வெற்றுவெளியை நோக்கினேன். வெகு தூரத்தில் வெள்ளிக் கிண்ணத்தைக் கவிழ்த்தது போல ஒரு 'டோம்' மங்கலாகத் தெரிந்தது. குரல் கொடுத்தவர் தொடர்ந்து கூறிக் கொண்டிருந்தார்: ''எந்தத் திசையிலிருந்து வருபவர்களானாலும் கோல் கும்பஜைப் பதினைந்து மைல்களுக்கு அப்பாலிருந்தே காணலாம். பீஜப்பூரின் பெருமையே இந்தக் கோல் கும்பஜினால்தான்.''

''கோல் கும்பாஜா, கும்பட்டா?''

''எப்படியும் கூறலாம். கோல் கும்பஜ், கோல் கும்பட், கோல் கும்பஜ். போலி கும்பஜ் இப்படிப் பல பெயர்களால் அழைக்கிறார்கள் இதை.''

ஒரு வழியாகப் பாஸஞ்சர் ரயில் வண்டியிலிருந்து விடுபட்டு, பீஜப்பூர் ஸ்டேஷனில் இறங்கிச் சோம்பல் முறித்துக்கொண்டேன். பிரயாணக் களைப்பைப் போக்க ஒரு தங்கும் விடுதியை நாடிப் போனேன்.

போகும் வழியெல்லாம் இடிபாடுகள்தான். முஸ்லிம் கட்டிடக் கலைக்குச் சான்றும் பெருமையும் தேடித் தரும் ஒரே பாணியிலான கட்டடங்கள் உருவத்தில் சிறியது பெரியதாக இருந்தாலும் விதானம், சுற்றுச் சுவர், வளைவுகள், வேலைப்பாடு முதலியவற்றில் எல்லாமே ஒன்று போலிருந்தன. பீஜப்பூர் நகரம் ஆறு மைல் சுற்றளவுள்ள கருங்கல் கோட்டையால் சூழப்பட்டிருந்தது. கோட்டை ஆங்காங்கே இடிந்தும் தகர்ந்தும் இருந்தாலும் அதன் அழகும் அமைப்பும் கம்பீரமும் குன்றவில்லை. கோட்டையைச் சுற்றி 40லிருந்து 50 அடி அகலமும் முப்பது அடிக்கும் மேலான ஆழமுமுள்ள அகழி இருக்கிறது. இந்த அகழி ஆங்காங்கே தூர்க்கப்பட்டு விளைச்சல் நிலமாகவும் மாற்றப்பட்டிருக்கிறது. சாதாரணமாகக் கோட்டைக்கு நாலு வாயில்கள் என்றால் இதற்கு ஐந்து வாயில்கள். இன்றைய பீஜப்பூரில் நடுத்தர வகுப்பு, ஏழை மக்களுக்கெல்லாம் கட்டடம் கட்ட வேண்டுமானால் அதிகத் தொல்லை இருக்காது போலும். பண்டையக் கோட்டைச் சுவர், மற்றும் கட்டடங்களின் இடிபாடுகளில் உள்ள கருங் கற்களைக் கொண்டே தங்கள் குடியிருப்புக்களை எழுப்பிக்கொண்டிருக்கிறார்கள். பல அரசாங்க அலுவலகங்களும்கூட இத்தகைய அழிந்த நகரின் அழியாத கற்களைக் கொண்டே எழுப்பப்பட்டிருக்கின்றன.

போக்குவரத்துக்கு அரசாங்க பஸ், குதிரை வண்டிகள். டாக்ஸிகள் கிடையாது. பஸ்ஸோ காரோ போனால் வீதியிலிருந்து எழும் வெண் புழுதி மூச்சுத் திணற வைக்கிறது. சரித்திரப் புகழ் பெற்றதும் சுற்றுலாப் பயணிகள் ஏராளமாக வருகை தருவதுமான இந்த நகரின் சுகாதார நிலை படுமோசமாக உள்ளது. சாலைகளும் சாக்கடைகளும் நன்கு பராமரிக்கப் படவில்லை. காரணம், இந்த ஊர் உங்களுக்கா, எங்களுக்கா என்று கர்நாடகமும் மகாராஷ்டிராமும் போட்டுக் கொண்டிருக்கும் சண்டையில் இன்னும் எவ்வித முடிவும் ஏற்படவில்லை. இரண்டு மாநிலங்களும் இதை 'அம்போ' என்று விட்டுவிட்டன. அரசனும் புருஷனும் கைவிட்ட அவல நிலை!

பீஜப்பூரின் பெருமையில் பெரும் பங்கு கோல் கும்பஜுக்குத்தான். உலகிலேயே இதுபோன்ற விதானமுடைய (Domical Roof) கட்டிடங்களில் இதுதான் மிகப் பெரியது. இதே போன்ற அமைப்பில் ரோம் நகரிலுள்ள பாந்தியான் என்ற கட்டிடத்தின் பரப்பளவு 15,833 சதுர அடிகள். ஆனால் கோல் கும்பஜின் பரப்பளவு 18,000 சதுர அடிகள். நிமிர்ந்து பார்க்கக் கழுத்தை வலிக்கிறது. இருநூறு அடிகள் பக்கங்களை உடைய சதுரமான கட்டிடம். நான்கு மூலைகளிலும் எண் கோண அமைப்பில் ஏழு மாடிகளுள்ள ஸ்தூபிகள். ஒவ்வொரு ஸ்தூபியினுள்ளும் சுழன்று சுழன்று மேலே செல்லும் படிகள். டோமின் உச்சிவரை அதன் உயரம் 200 அடிகள். ஐந்தாவது மாடியை அடைந்ததுமே சதுரக் கட்டிடத்தின் உச்சிக்குப் போய்விடுகிறோம். இந்த நிலையிலிருந்துதான் டோமின் வளைவு (ஆர்ச்) ஆரம்பமாகிறது. இந்த இடத்தில் இதைச் சுற்றி வர உள்ளும் வெளியிலும் அகலமான நடை பாதைகள் (ஆளோடிகள்) உள்ளன. உள்ளே எவ்விதத் தூண்களும் இல்லாமல் இந்த நடைபாதையை நூறு அடி உயரத்தில், பத்தடிக்கும் அதிகமான அகலத்தில் உட்புறமாக நீட்டிக் கொண்டிருக்கும்படி அமைத்திருப்பது இந்தியக் கட்டிடக் கலையின் அற்புதங்களில் ஒன்று. அது மட்டுமா? கிண்ணத்தைக் கவிழ்த்தது போன்ற எத்தனை பெரிய டோம்! அதன் குறுக்களவு 135 அடி. எல்லாவற்றுக்கும் சிகரமாக, விதானத்தின் விளிம்பிலே ஓடும் நடைபாதையில் நின்று கைதட்டினால் பத்துத் தடவைகள் அதன் ஒலி அடுத்தடுத்து எதிரொலி செய்து அடங்குகிறது! அதிசயத்திலும் அதிசயம், டோமின் சுவர் ரகசியம் பேசுகிறது. குறிப்பிட்ட ஓர் இடத்தில் இதற்காக ஒரு கல் ஆசனம் அமைத்திருக்கிறார்கள். அதில் உட்கார்ந்து சுவரில் காதைப் பதித்துக் கொள்ள வேண்டும்.. அதற்கு நேர் எதிரில் — 135 அடிகள் அப்பாலுள்ள சுவரின் அருகேயும் அதே போன்று இன்னோர் ஆசனமுள்ளது. அதில் இன்னொருவர் சுவரை யொட்டினாற்போல் அமர்ந்து கொண்டு ஏதாவது பேசினால் அல்லது பாடினால் அது அப்படியே இங்குள்ளவரின் காதில் ஒலிக்கிறது. அதே மாதிரி இங்குள்ளவர் பதில் கூறினால் அங்கு கேட்கிறது. இதை 'விஸ்பரிங் காலரி' என்கிறார்கள்.

இந்த அற்புதக் கட்டடம் ஒரு கல்லறை. மும்தாஜுக்கு ஷாஜஹான் கட்டிய காதல் மாளிகையைப் போலவே, முகம்மது ஆதில் ஷா தமது ஆசை நாயகியான ரம்பா என்ற நாட்டியக்காரிக்கு இந்தக் கல்லறையில் தம் அருகே இடமளித்திருக்கிறார். இதைப் பற்றி ஒரு கதை வழங்குகிறது.

கோல் கும்பஜ் கட்டி முடியும் நிலை. உள் பூச்சு நடந்து கொண்டிருந்தது. கலை

---

''ஸாரி ஸார்! உங்கள் பையனுக்கு எங்கள் காலேஜில் 'ஸீட்' கொடுக்க முடியாது.''
''ஏன் ஸார், அவன்தான் நிறைய மார்க் வாங்கியிருக்கிறானே?
''அதற்கில்லை. ஒரே ஒரு 'ஸீட்'தான் இருக்கிறது அதனால்தான்!'' —முரளி

# ஜலதோஷமும் ஃப்ளூவும்— சில முக்கிய தகவல்களும் முறியடிக்கும் முறைகளும்

## "அனஸின் எனக்குப் பெரிதும் உதவுகிறது" என்கிறார் நர்ஸ் ஏஞ்சலா ஃபெர்னண்டஸ்.



**நர்ஸ் ஏஞ்சலா ஃபெர்னண்டஸ், ஜலதோஷத்தையும் ஃப்ளூவையும் எதிர்த்து, விரைவில் வலிகளிலிருந்து நிவாரணமளிக்க சக்தி வாய்ந்தது அனஸின் என்பதைக் கண்டறிந்தவர்.**

### ஜலதோஷமும் ஃப்ளூவும் வரக் காரணம் என்ன?

பாதிக்கப் பட்டவர்களிட மிருந்து காற்றில் வரும் விஷ அணுக்கள் ஜலதோஷத்தையும் ஃப்ளூவையும் பரப்புகின்றன. இந்த விஷ அணுக்களை சாதாரணமாக உடல் எதிர்க்கிறது. ஆனால் அளவுக்கு மீறிய உழைப்போ சத்துக் குறைவோ உடலைப் பலவீனப் படுத்தி, நோய் எதிர்ப்பாற்றலைக் குறைக்கிறது.

### அறிகுறிகள் யாவை?

உடல் வலி, தலைகனம், தும்மல், மூக்கிலே ஒழுக்கு இவற்றுடன் ஜலதோஷம் தொடங்கும். குளிர், அமைதியின்மை, வியர்வை தோன்றும், இருமல், தொண்டைப்புண், பசியின்மை, உடல் சோர்வு, தொடரலாம்.

### சிக்கல்கள் தோன்றுமா?

புறக்கணித்தால் நிமோனியாவிலும் சுவாசகோசம் மற்றும் மேல் மூச்சுக் குழாயின் நோய்த் தொற்றிலும் முடியலாம்.

### அனஸின் எப்படி உதவுகிறது?

இது ஜலதோஷம், ஃப்ளூவினால் ஏற்படும் வேதனையைப் போக்குகிறது. உலகெங்கும் டாக்டர்கள் சிபாரிசு செய்யும் வலி-நிவாரணியை அதிக அளவில் கொண்ட அனஸின் சக்தி வாய்ந்தது. டாக்டரின் நம்பகமான மருந்துக் கலவை போன்றது. ஜலதோஷம், ஃப்ளூவின் முதல் அறிகுறி தோன்றியதுமே, அனஸின் சாப்பிடுங்கள், ஒரு நாளைக்கு 4 தடவை.

### நீங்கள் வேறென்ன செய்ய வேண்டும்?

- நிறைய திரவ பதார்த்தங்கள், கொதிக்க வைத்த நீர், ஆரஞ்சு எலுமிச்சை சாறு பருகுங்கள்.
- சத்துணவு புசியுங்கள்.
- போதிய ஓய்வெடுங்கள்.
- ஆன்டிசெப்டிக் மருந்து அல்லது உப்புக் கரைத்த நீரால் கொப்புளியுங்கள்.
- அறைகள் காற்றோட்டமாக இருக்கட்டும்.

## சக்தி வாய்ந்த, நம்பகமான

# அனஸின்

இந்தியாவின் புகழ் பெற்ற வலி-நிவாரணி



A-1-7/74

Regd. User of TM: Geoffrey Manners & Co. Ltd.

உள்ளம் கொண்ட மன்னர் முகம்மது ஆதில் ஷா தம் அன்புக்கினியாளான ரம்பாவுடன் விதானத்தின் ஆளோடியில் ஏறிச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தார். அப்போது விளையாட்டாகக் கிசுகிசுக்கும் சுவரிலே காதையும் வாயையும் பதித்துக் காதலர்கள் இங்கும் அங்கும் அமர்ந்து சல்லாபித்துக்கொண்டிருந்தனர். காதலர்களின் ரகசியப் பேச்சுக்களைச் சுவர் எதிரொலித்துக் கொண்டிருந்தது காதலர்களின் காதிலே.

''கண்ணே, நீ என்னைக் காதலிக்கிறாயா?'' என்று கேட்டார் காதலரான முகம்மது ஆதில் ஷா. ''இந்த உலகில் உள்ள எல்லாவற்றையும் விட மேலானதாக என்னை நீ விரும்புகிறாயா?''

''ஆமாம், என் அன்பே!'' என்று எதிர்க்கோடியிலிருந்து கூறிய பதில் இங்கே ஆதில் ஷாவின் காதிலே கணீரிட்டது, துல்லியமாக. ரம்பாவின் குரலேதான்.

''உன் உயிரையும்விட மேலாக நேசிக்கிறாயா?''

''நிச்சயமாக நேசிக்கிறேன், காதலரே!''

''இங்கிருந்து கீழே குதிக்கும்படி நான் கட்டளையிட்டால் நீ அப்படியே செய்வாயா ரம்பா?''

''காதலரே! என் அன்பிலே உங்களுக்குச் சந்தேகமா?''

''எங்கே, அப்படியானால் குதி, நான் பார்க்கிறேன்.''

பட்டின் சரசரப்பையும் தங்க வளையல்களின் கலகலப்பையும் கேட்டுச் சுவரிலிருந்து காதைப் பெயர்த்துக் திரும்பினார் ஆதில்ஷா. ''ஐயோ, இதென்ன?''... ரம்பா விதானத்தின் ஆளோடியிலிருந்து குதித்து விட்டாள்.

''ஆ, அல்லா! ஆண்டவனே! என் ரம்பாவைக் காப்பாற்று'' என்று அலறினார் சுல்தான். கீழே வேலை செய்துகொண்டிருந்த கலைஞர்கள் திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தார்கள். நல்ல வேளை, சாரங்கள் இருந்ததால் ரம்பாவின் உடல் கீழே தரையில் மோதிச் சிதறாமல் அவளைச் சாரங்கள் தாங்கிக் கொண்டன.

மூர்ச்சையுற்ற நிலையிலிருந்த ரம்பாவை மெல்லக் கீழே கொண்டு வந்து படுக்கையில் கிடத்தினார்கள். வைத்தியர்கள் ஓடி வந்தார்கள். பன்னீரும் சந்தனமும் கலந்த குளிர்ந்த தண்ணீர் தெளிக்கப்பட்டது முகத்திலே. மெல்லக் கண் விழித்தாள் ரம்பா. ''இந்த உன் அடிமையிடம் உன் காதலுக்குப் பரிசாக நீ எதை வேண்டுமானாலும் கேள். என் உயிரையே கேட்டாலும் தருகிறேன்'' என்றார் ஆதில்ஷா.

''உங்களிடம் நான் விரும்பும் ஒரே பரிசு, அன்பரே, இந்த அழகான மாளிகையில் உங்கள் அருகில் எனக்கும் ஓர் இடத்தை ஒதுக்க வேண்டும். மரணத்திலும் நாம் பிரியக் கூடாது'' என்ற ரம்பாவின் செழுமையான கன்னங்களில் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.

''அப்படியே ஆகட்டும்!'' என்ற ஆதில் ஷா அவள் விருப்பத்தை நிறைவேற்றி விட்டார். கோல் கும்பஜின் நடுக் கூடத்தின் கீழே பாதாளக் கீழ்த் தளத்தில் முகம்மது ஆதில்ஷா, அவரது பேரன், அவனது இளம் மனைவி, ஆதில்ஷாவின் ஆசைக் கிழத்தி ரம்பா, மாலையிட்ட மனைவி, மகள் ஆகியோரின் கல்லறைகள் வரிசையாக இருக்கின்றன. கோல் கும்பஜ் நினைவை விட்டகலாத ஒரு காவியம். பிரும்மாண்டம் என்ற வார்த்தைக்கு எடுத்துக் காட்டாகவும், கம்பீரம் என்ற சொல்லுக்கு இலக்கணமாகவும் விளங்குகிறது. அதன் உச்சியில் ஏறி நின்றால் பீஜப்பூர் நகரத்தையே தரிசனம் செய்ய முடிகிறது. இதை நல்ல நிலையில் பராமரித்து வருகிறார்கள். ஆண்டுமுழுதும் இங்கு சுற்றுலாக் கூட்டம் வருகிறது.

பீஜப்பூரில் காண வேண்டிய இடங்கள் ஏராளம். ஒவ்வொரு சின்னமும் எத்தனையோ கதைகளையும் வரலாற்றுச் சிறப்புகளையும் சொல்லுகின்றன. சுகன் மஹால், ஜலமஹால், சத்மஹால், மாலிகா ஜஹான் பேகம் மாஸ்க் என்று அடுக்கிக் கொண்டே போகலாம். ஒவ்வொன்றையும் பற்றி விரிவாக விளக்குவதானால் ரஸமானதொரு நாவலாகிவிடும் இந்த நகர்வலம்.

அஸர் மஹால் என்ற இடத்தில் நபிகள் நாயகத்தின் தாடியிலிருந்து இரு ரோமங்களை ஒரு கண்ணாடிக் குழாயில் வைத்து அதை ஒரு தங்கப் பேழைக்குள்ளிட்டு அந்தப் பேழையை ஒரு முக்கோணப் பெட்டியில் வைத்து அந்தப் பெட்டியை ஓர் உறுதியான கருப்புப் பெட்டகத்தில் வைத்துப் பாதுகாக்கிறார்கள். அந்தப் புனிதப் பொருளை இதுவரை யாரும் பார்த்ததில்லை. அந்தப் பெட்டி திறக்கப்படுவதுமில்லை. தலைமுறை தலைமுறையாக அந்தப் புனிதப் பேழை கைமாறிப் பாதுகாக்கப்பட்டு வருகிறது. ஆண்டுக்கு ஒரு முறை மூடியுள்ள அந்தப் பெட்டியைப் பொதுமக்களின் பார்வைக்கு வெளியில் எடுக்கிறார்கள். அது ஒரு பெரிய திருவிழா. (உருஸ்)

தம் மூதாதையர் உருவாக்கிய கட்டடங்களை யெல்லாம் மிஞ்சும்படி தான் ஒரு கல்லறையை உருவாக்க எண்ணினார் இரண்டாம் அலி ஆதில் ஷா. மிகப் பிரம்மாண்டமாக அமைக்கத் திட்டமிட்டது முற்றுப் பெறாமலே பாழியாகக் காட்சி தருகிறது. அகத்தையினால் எழுந்தது அழகு பெறவில்லை.

ஆதில் ஷாஹி மன்னர்கள் பீஜப்பூர் மக்களுக்குக் குடி தண்ணீர் வசதியை அற்புதமான முறையில் அந்த நாளிலேயே அமைத்திருக்கும் வித்தையை வியக்காமலிருக்க முடியாது. நகரில் எல்லாப் பகுதிகளுக்கும் அரண்மனை, மசூதி போன்ற இடங்களுக்கும் பூமிக்கடியில் சுட்ட மண் குழாய்களை (ஓடு போல)ப் பதித்து நீர்த் தேக்கங்களிலிருந்து தண்ணீரை அதன் வழியாகப் பாயச் செய்திருக்கிறார்கள்.

மாலிக் ஏ மைதான் என்னுமிடத்தில் பிரமாண்டமான ஒரு பீரங்கி இருக்கிறது. இதன் நீளம் பதினான்கு அடிகளுக்கும் மேலே. இதன் வாயின் குறுக்களவு மட்டும் நாலடிகள். நிறை 55 டன்கள். தாமிரம், இரும்பு, தகரம், ஆகிய உலோகக் கலவை கொண்டு 1559ல்

''எங்கள் ஊர்க் காலேஜ் பிரின்ஸிபாலிடம் ஒரு 'ஸீட்'டுக்காக நடையாக நடந்து அலுத்துப்போய் நான் சாமியாரானேன். நீங்கள் எப்படி சாமியாரானீர்கள்?''
''நான்தான் அந்த காலேஜ் பிரின்ஸிபால்!''
—ஜாலி



வார்க்கப்பட்டது. சிங்கம் திறந்த வாயுடன் படுத்திருப்பது போன்ற வேலைப்பாடு கொண்டது. பத்து யானைகள், 400 காளைகள், பல்லாயிரக்கணக்கான மனிதர்களின் உதவியுடன் இதைக் கோட்டை மீது ஏற்றி இருக்கிறார்கள். இதன் வெளிப்புறம் கரும் பச்சை நிறத்தில் உள்ளது. கண்ணாடி போல வழுவழுப்பாகவும் பளபளப்பாகவும் இருக்கிறது—காலமெல்லாம் திறந்தவெளியில் இருந்தும் கூட. இதைத் தட்டினால் மணியோசை உண்டாகிறது. இந்த அற்புதமான பீரங்கியைப் பிரிட்டிஷார் இங்கிலாந்துக்குக் கொண்டு போய் விடுவது என்று ஆசைப்பட்டிருக்கிறார்கள். ஆனால் நகர்த்தக் கூட முடியாத நிலையில் முயற்சியைக் கைவிட்டிருக்கிறார்கள். இதை ஒரு சமயம் பீஜப்பூர் நகர மாஜிஸ்திரேட் ஒருவர் 150 ரூபாய்க்கு ஏலம் விட்டிருக்கிறார். அதிர்ஷ்டவசமாக இந்த விற்பனையைக் கலெக்டர் கமிஷனர் ரத்து செய்து நாடு நகரமெல்லாம் கண்டு மகிழ இதை இங்கேயே நிலைக்க வைத்திருக்கிறார். இதைவிட நீளமான ஆனால் இத்தனை வேலைப்பாடு இல்லாத இன்னொரு பீரங்கி கோட்டையின் இன்னொரு பகுதியின் மேலிருக்கிறது. இவை தவிர பல பீரங்கிகள் ஆங்காங்கே அழகுக்காக நிறுவப்பட்டிருக்கின்றன.

இவ்வளவு இருந்தும் இங்கேயுள்ள கன்னடியர்களும் மராத்தியரும் தத்தம் மாநிலத்தில் சேரவேண்டுமென்பதற்காக நடத்தும் பிரசார பீரங்கிகளின் ஒலியில் அமிழ்ந்து, மகாராஷ்டிரத்திலும் சேராமல் கர்நாடகத்திலும் சேராமல் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறது?

× × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × ×

# டில்லி மாமியார்!

அஸ்திவாரமில்லாமல் சிரிப்பு மாளிகை எழுப்புவதில் நமது நாடகக் குழுவினர் சமர்த்தர்களாகி வருகிறார்கள்.

அண்ணன்-தம்பி இருவரும் தங்கள் மனைவிமார்கள் சண்டை போட்டுக் கொள்வதைச் சகிக்க முடியாமல் தவிக்க, அவர்கள் சித்தப்பா டில்லியிலிருந்து வர, அவர் குடும்ப நிலைமையைச் சீர்படுத்த நினைக்க --

அவருக்கு உதவ முன்வருவது யாரென்று நினைக்கிறீர்கள்?

ஒரு கூடைக்காரி!

ஆந்திரேடு போன தன் மனைவிக்குப் பதில் கூடைக்காரியை மனைவியாக நடிக்கச் சொல்லி அவளை டில்லி மாமியாராக்குகிறார் சித்தப்பா.

கதையின் அஸ்திவாரம் இப்படிப் பலவீனமாக இருப்பதை உணர்ந்துதானோ என்னவோ நாடகாசிரியர் சினிமாக் கதைகளை Parody பண்ணுவதாகச் சித்தப்பா பேசும் வசனத்தின் மூலம் நமக்கு உணர்த்துகிறார்.

ஆட்டம் கண்டுவிடும் அஸ்திவாரத்தை மறந்துவிட்டு மாளிகையைப் பார்த்தால் தாஜ்மஹாலாக ஜொலிக்கிறது.

கோமல் சுவாமிநாதனின் வசனம் தாராளமாகச் சிரிப்பலைகளை எழுப்புகிறது என்றாலும் முதல் பரிசைத் தட்டிக் கொண்டு போவது அகில இந்திய ரேடியோவும் அதன் விவசாயிகளுக்கான நிகழ்ச்சியும்தான்!

மேஜர் சுந்தரராஜனின் நடிப்பு அவர் தோன்றுகிற கட்டங்களில் சிறக்கிறது என்றால் டைரக்ஷன் காட்சிக்குக் காட்சி வாழ்த்துப் பெறுகிறது.

சீறும் பெண் புலிகளாகப் பானுமதியும் புஷ்பாராணியும் ஜமாய்த்து விட்டார்கள்.

கேலியாகத் தோன்றும் ராஜகோபால் பிரமாதப்படுத்துகிறார் என்று சொன்னால், அது அவரது பிலோடுக்கும் 'ஸேஸ-ரீவேன்' வசனத்துக்கும் பயந்து அல்ல!

'தம்பி' சிவகுமாரின் நடிப்பு அனுபவ மெருகேறிய ஒன்று. அதற்குச் சமதையாக நிற்க முடியாமல் 'அண்ணன்' நரசிம்மன் சிறிது சிரமப்படுவதில் வியப்பில்லை.

டில்லி மாமியாராக மாறும் மயிலாப்பூர் கற்பகத்திடம் நமக்கு நம்பிக்கை விழாவிட்டாலும் நளினியின் நடிப்பாற்றலில் நம்பிக்கை இல்லாமல் போகவில்லை.

அரசியல் வாடை அளவாக ஆனால் அழுத்தமாக வீசும் இந்த நாடகத்தின் சிரிப்புச் சுவையை அதிகரித்துக் காட்ட வேறு பல நடிகர்களும் ஒத்துழைத்திருக்கிறார்கள்.

அது சரி, இன்றைய அரசியல் 'டில்லி மாமியார்' யார்? —கி. ரா.



இந்த மர்ம நாவலை
நீங்கள் படித்து வரும்போதே
ரூபாய் **500/=** பரிசு பெறும்
வாய்ப்பையும் அடைகிறீர்கள்!

(விவரங்கள் அடுத்த இதழில்)

**ரேகா சந்திரநாத்** எழுதும்

# சுவரில் இரு விழிகள்

திரில் தொடர்கதை
**கல்கி**
ஆகஸ்டு 3
சிறப்பிதழில்
ஆரம்பம்.

# கட்சி மாறும் பட்சி

கதை: குட்டி கிருஷ்ணன்
படம்: ராஜு

13

ஸி.ஐ.டி. கண்ணாயிரத்தி
டமிருந்து சதித் திட்டங்
கள் பற்றிய விவரங்களை
அறிந்த இன்ஸ்பெக்டர்
கீதா, மேலதிகாரியிடம்
போய்....




ஸி.ஐ.டி. கண்ணாயிரம்
இடைமறித்து....
















அமாவாசை இருட்டு, அகல் தாஸ் சந்து, ஒன்றரை முக்கால் மணி. திட்டப்படி பட்சி நைட் ஷோ பார்த்து விட்டுத் திரும்புகிறான். ஒளிந்திருக்கிறாள் கீதா....
அவரைத் திருத்தப் பயன்படும் என்று இந்தச் சீருடை தரித்தேன். அவர் உயிரைக் காக்கவே உதவுகிறதே!


திடீரென்று பட்சி வழி மறிக்கப் படுகிறான். இருள் பட்சியை ஏமாற்ற...
டேய் நில்லுடா, அங்கே!
ஆ! சொக்கப்பன் வந்துட்டான். கொஞ்சம் டயமாத் பேசலாம்!


குத்துடா! குத்து! குருதி கொப்பளித்துத் தலையுமில் லாம் பரவினாலும் பட்சியின் லட்சியம் பதவிக் கட்சியிடம் நிச்சயம்!.... ஓ! உனக்குப் பக்கத் துணை வேறு? ஆம்! நீ கூலி பெறு முன் உன் வேலை முடிந்ததென்று சான்றி தழ் தர ஒருவன் வேண்டும் தானே!


'ஆஹா! என்ன வீரம்!' என்று ஒரு கணம் மயங்கிய கீதா அடுத்த கணம் கடமை நினைவுவர மறை விடத்திலிருந்து பாய்ந்தாள்.
டேய், படுபாவிங்களா! விடுங்கடா பட்சியை! நடங்கடா ஸ்டேஷனுக்கு!


சூழ்ச்சி பலிக்காததால் ஆத்திரம், போலீஸ் உடை கண்டு அச்சம், இரண்டும் சேர பதற்றமடைந்த பிரிந்த கட்சி அடியாட்கள் இடையில் புகுந்த இன்ஸ்பெக்டரைக் குத்தி விட்டு எடுத்தார்கள், ஓட்டம்! அதே சமயம் சொக்கப்பன் வந்தான்.
ஸாரி வாத்தியாரே, கொஞ்சம் லேட் ஆயிடுச்சு!....

தொடரும்

சென்ற ஞாயிறன்று பிரபல சினிமா டைரக்டர் தாசப்பாவுக்கு ஓர் 'அவசர டெலிபோன்' வந்தது. அவர் சகோதரி யமுனாபாய் தான் பேசினாள். தான் சில கிடாப்பிடி குண்டர்களிடம் மாட்டிக் கொண்டிருப்பதாகவும், அவர்கள் பத்தாயிரம் ரூபாய் 'ரான்சம்' கேட்பதாகவும் குறிப்பிட்டாள். போலீசுக்குத் தகவல் தெரிவிக்காமல் 'ரணபீர் ரெடிமேட்ஸ்'க்கு முன்னால் எட்டு மணிக்குப் பணத்துடன் வரச் சொன்னாள். பக்கத்தில் இருக்கும் 'டவர் கிளார்க்'கில் எட்டு மணி அடித்தவுடன் தலையில் 'வயலெட்' கைலி அணிந்து கொண்ட ஆசாமி ஒருவன் காரின் பக்கத்தில் வந்து மும்முறை சிகரெட் புகைப்பான் என்றும், அவனிடம் வாய் திறவாமல் பணத்தைத் தந்துவிட்டால் தனக்கு விடுதலை கிடைக்கும் என்றும் குறிப்பிட்டாள்.

இந்த விஷயத்தைத் தாசப்பா தம் மனைவி கோதாவரியிடம் மட்டும் இரகசியமாகச் சொன்னபின், டெலிபோனில் பேசின குரல் தன் தங்கை யமுனாபாயின் குரல்போல் இருக்கவில்லை என்றார். 'பயத்தில் அவள் குளறியிருப்பாள்' என்றாள் கோதாவரி.

பத்தாயிரம் ரூபாயுடன் 'ரணபீர் ரெடிமேட்ஸை'ப் பார்த்துக் காரை விட்டார் தாசப்பா. டவர் கடிகாரம் எட்டு அடித்தது. 'கர்சிப்' ஆசாமியை அவர் தேடுவதற்கும், விளக்குகள் திடுதிப்பென்று அணைவதற்கும் சரியாயிருந்தன! அடுத்த நிமிஷம் யாரோ அவரைக் குத்திவிட்டு ஓடிவிட்டார்கள்.

'ரணபீர் ரெடிமேட்ஸ்' முன்னால் கொலை நடந்ததினால் அதன் முதலாளி பீம்சிங்கை விசாரிக்க முன் வந்தார் துப்பறியும் மாதவ ராவ்.

''மிஸ்டர் பீம்சிங்! விளக்குகள் அணைந்த போது நீங்கள் எங்கிருந்தீர்கள்?''

'' என் கடையில்தான்.''

'' கடையைவிட்டு எங்கோ ஓடிவிட்டுத் திரும்பினதாக ஒரு சிலர் சொல்கிறார்களே?''

'' அதுவா? மெழுகுவத்தி வாங்கி வருவதற்காக வெளியே ஓடினேன். உடனே திரும்பிவிட்டேன்.''

'' கடையில் வேறு யார் இருந்தார்கள்?''

''சிப்பந்திகளைத் தவிர என் சகோதரி பாமினியும் இருந்தாள்.''

''பாமினி! இந்தப் பெயர் பழக்கமான பெயர்போல் தொனிக்கிறதே.''

'' நீங்கள் அடிக்கடி சினிமா பார்ப்பது உண்டா? ஹாஸ்யக் காட்சிகளில் உபநடிகையாகத் தோன்றுவாள் அவள்.''

''ஆ..ஸ்! இப்பொழுது ஞாபகம் வருகிறது!.... சில கிசுகிசுப் பத்திரிகைகளில் பாமினியைப் பற்றியும் கொலை செய்யப்பட்ட தாசப்பாவைப் பற்றியும் கன்பின்னாவென்று என்னென்னவோ எழுதியிருந்தனவே! தூக்கம் வராத வேளையில் இந்தப் பத்திரிகைகளை நான் படிப்பது வழக்கம்.''

''அவர்கள் எழுதினதெல்லாம் உண்மைதானுங்க. பாமினியை மணந்து கொள்கிறேன் என்று ஆசைகாட்டிக் கெடுத்துவிட்டார் தாசப்பா. பெண்களை மோசம் செய்வது அவர் 'ஹாபி'யாயிற்றே!''

''பாமினியை ஏமாற்றினதற்குத் தண்டனை கைமேல் கிடைத்துவிட்டதே! அதுவும் உங்கள் கடை முன்னால்.... வெளியே மெழுகுவத்தி வாங்கச் சென்ற நீங்கள் உடனே திரும்பி விட்டீர்களா?''

'' நான்தான் விவரமாக எல்லாம் சொல்லி விட்டேனே. திரும்பத் திரும்ப நீங்கள் துருவு

# காட்டிக் கொடுத்தவள்!

மாதவ ராவ் மடக்குகிறார் - 3



வதைப் பார்த்தால்தான் நான் கொலை செய்தேன் என்று சாதித்துவிடுவீர்கள் போலிருக்கிறதே !''

'' உங்கள் கடை முன்னால் நடந்த கொலையாகையால் உங்களைத் தீவிரமாக விசாரிக்கிறோம் ; அவ்வளவுதான். போகட்டும், உங்கள் குடும்பத்தில் வேறு யார் உண்டு ?''

'' இந்த அபத்தமான கேள்விகளுக்கு ஒரு முடிவில்லையா? எனக்குத் தாராசிங் என்றோர் அண்ணன் உண்டு.''

''அவர்கூட 'பிஸினஸ்' தான் செய்கிறாரா?''

'' சர்க்கார் உத்தியோகம் இருக்கையில் அவர் ஏன் 'பிஸினஸ்' செய்கிறார் ? அவர் 'பவர் ஹவுஸி'ல் வேலை பார்க்கிறார்.''

மாதவராவ் ஏதோ யோசித்தார். பிறகு தொடர்ந்து கேள்வி கேட்கத் தொடங்கினார். ''பவர் ஹவுஸிலா? கொலை நடந்த தினம்கூட விளக்குகள் திடீரென்று அணைந்தனவே ! அதைப் பற்றி நீங்கள் அண்ணனிடம் விசாரித்தீர்களா ?''

''இல்லை.''

''அன்று மழை, புயல் எதுவும் கிடையாது. விளக்குகள் எட்டு மணி பார்த்து ஏன் திடீரென்று அணைந்தன ? ஆச்சரியமாக இருக்கிறதல்லவா ?''

'' இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றும் இல்லை. எத்தனையோ தடவை இது போல் நடந்திருக்கிறது.''

''பின் நீங்கள் ஏன் மெழுகுவத்தி 'ஸ்டாக்' செய்வதில்லை?''

'' சாதாரணமாக 'பெட்ரோமாக்ஸ்' இருக்கும். அன்று துரதிர்ஷ்டவசமாக அது கெட்டுப் போயிருந்தது.''

''இறந்து போன தாசப்பாவுக்கு டெலிபோன் கால் வந்தது பற்றித் தெரியுமா?''

'' பத்திரிகையில் படித்தேன்.''

''பேசின குரல் தன் தங்கை யமுனாபாயின் குரல் போல் இருக்கவில்லை என்று அவர் தம் மனைவி கோதாவரியிடம் கூறியிருக்கிறார். ஒரு நடிகை நினைத்தால் தன் குரலை மாற்றி இன்னொருவர் போல் தத்ரூபமாகப் பேச முடியுமில்லையா ?''

''முடியும்.''

'' பின் பாமினியால் ஏன் யமுனாபாயாட்டம் பேச முடியவில்லை ?''

''பாமினி எதற்காக யமுனாபாயாட்டம் பேசுகிறாள் ?''

''எனக்கென்ன தெரியும்? பேசினதாக ஒப்புக் கொண்டு விட்டாளே ! அது மட்டுமா? கொலை சம்பந்தமான எல்லா இரகசியத்தையும் வெளியிட்டுவிட்டாள்.''

'' என்னது ? எல்லாவற்றையும் சொல்லிவிட்டாளா ? அடி பாவி ! உனக்காகத்தானே இவ்வளவும் செய்தோம் ? கடைசியில் காட்டிக் கொடுத்துவிட்டாயே !.... இனி எதையும் மறைப்பதில் பயனில்லை. உண்மையைச் சொல்லிவிடுகிறேன். ஸார்! தாசப்பா என் தங்கை பாமினியிடம் தகாத முறையில் நடந்து கொண்டு அவளைக் கெடுத்துவிட்டார். அவரைப் பழி வாங்குவதற்காக நானும் என் அண்ணனும் திட்டம் போட்டோம். யமுனாபாயாட்டம் குரலை மாற்றி டெலிபோனில் பேசினது பாமினிதான். ஏற்கனவே திட்டமிட்டிருந்தபடி சரியாக எட்டு மணிக்கு பவர் ஹவுஸில் பணியாற்றும் என் அண்ணன் பத்து நிமிடங்களுக்கு விளக்கை அணைத்தான்... கடையைவிட்டு வெளியே வந்த நான் மூன்றே நிமிடங்களில் வேலையை முடித்துவிட்டேன்.... ஆமாம், எங்களைக் காட்டிக் கொடுத்த பாமினி எங்கே இருக்கிறாள்?''

''உங்க தங்கை கறுப்பா சிவப்பா என்றுகூட எனக்குத் தெரியாது. கொலை நடந்த இடத்துக்குப் பக்கத்தில் இருப்பவர்களை 'ரூடீ'னாக விசாரிக்கத்தான் நான் வந்தேன். நீர் குற்றவாளி என்று நினைக்கவே இல்லை ! பாமினியைப் பற்றியும், பவர்ஹவுஸில் பணியாற்றும் அண்ணனைப் பற்றியும் நீர் கூறியபோது என் துப்பறியும் மூளை அவற்றைப் பிணைத்தது. சரியான வேளையில் பாமினியை நான் சந்தித்ததாகச் சொல்லி உம்மை மடக்கினேன்!''

— ஜி. எஸ். பி.



# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி





## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பமிகமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழிவகுத்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லூலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது. இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்—**
**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

## வட்டமேஜை

தமிழ்நாடு பால் வள நிறுவனம் தனது சேவை பற்றித் தம்பட்டம் அடித்துக் கொண்டுள்ளது. விண்ணப்பித்தவருக்கெல்லாம் புது பால் கார்டுகள் கொடுப்பதாய்க் கூறுகிறது. நேரில் போய்க் கேட்டோமானால், 'ஒவ்வொரு விண்ணப்பத்தாரரும் அவசியம் ஒரு நெய் பாட்டில் வாங்கினாலொழியப் புது கார்டுகள் கொடுக்கப்படுவதில்லை' என்பது தெரியவரும். (நந்தனம் அலுவலகம்). இவ்விதம் கட்டாயப்படுத்தி மக்கள் தலையில் சுமத்தி வியாபாரம் செய்யும் அரசு நிறுவனங்களில் நஷ்டமே ஏற்படுகிறது. பொதுமக்களுக்கும் அதிருப்தி. அரசு நிறுவனம் என்றுமே இப்படி அல்லல்தான்.

சென்னை
18–6–75 என். வி. எஸ். மணியன்

"உணர்ச்சி பேதம்" கதையில் வருவது போல் இராமகிருஷ்ண மடத்தில் 'ஆனந்த' ராக ஆகிவிடுவது அத்தனை எளிதல்ல.

"பிரம்மசாரி" என்ற பட்டத்துடன் குறைந்த பட்சம் ஒன்பது வருடங்கள் கடுமையான ஆசார அனுஷ்டானங்களையும் விரதங்களையும் கடைப்பிடித்துப் பயிற்சி பெற வேண்டும். இந்தப் பயிற்சிக்குப் பின் பேலூர் மடத்தில் சில காலம் தங்கி மற்றும் சில பரீட்சைகளுக்கு உட்பட வேண்டும். பிறகு, இவர்களுள் தகுதி உள்ளவர் என்று தேர்ந்தெடுக்கப்படும் மிகச் சிலருக்கே உபதேசமும் 'தீட்சா நாம'மும் வழங்கப்படுகிறது.

புதுவை – 6
20–6–75 ஜி.கே. பத்மநாபன்

பத்மஸ்ரீ மோஹன்மல்ஜி சோர்டியாவின் வண்ணப் படமும் அவரைப் பற்றிய கட்டுரையும் பார்த்துப் பெருமகிழ்ச்சி அடைந்தோம். எங்கள் சங்கத்தின் தலைவர் அவர். பசுவதைத் தடுப்புக்காக நமது மாநிலத்தில் இடையறாது பாடுபட்டு வருகிறோம்.

ஜைன மதத்தின் முக்கிய கொள்கை அஹிம்சை. எங்கள் தலைவர் வழிகாட்ட நாங்கள் பல பட்சிகளைக் காப்பாற்றி அடையாறு அல்லது வேடந்தாங்கலில் வாழச் செய்திருக்கிறோம். கொல்லப்பட விருந்த ஏராளமான பசுக்களைக் காப்பாற்றிப் பாதுகாத்து வருகிறோம். மாதவரம் பால் பண்ணையில் கறவையில்லா மாடுகளை ஏலம் போடுவதைத் தடுக்க, அவற்றையெல்லாம் வாங்கிப் பராமரிக்க முன்வந்துள்ளோம்.

சென்னை-1 சம்பலால் குலேசா, காரியதரிசி
14–6–75 அஹிம்சா பிரசார சங்கம்

"டாக்டருக்கு ஆபத்து" படித்தேன். நன்று. டாக்டர்களே அத்தனை ஆபத்துக்களை எதிர்நோக்குகின்றனர் என்றால் கால்நடை மருத்துவர் பற்றி எண்ணிப் பாருங்கள் :

அடைப்பான், கருச் சிதைவு நோய், காச நோய் போன்ற பல கொடிய நோய்கள் மிருகங்களிடமிருந்து மனிதர்களுக்குப் பரவக் கூடியவை. இவற்றுள் பல நோய்களுக்கு இன்றுவரை மருத்துவத் துறையிலேயே முறையான முழுமையான சிகிச்சை முறை கண்டு பிடிக்கப்படவில்லை !

வெறி நாய்க்குச் சிகிச்சை செய்யப் போய், "வெறி நோய்"க்கு (Rabies) இலக்காகக் கூடிய மிருக வைத்தியரை அனுதாபத்துடன் நோக்குங்கள்.

முரட்டு மிருகங்களின் கூர்மையான பற்கள், கொம்புகள், நகங்கள், கனமான குளம்புகள் ஆகியவற்றால் நேரக்கூடிய காயங்கள் எவ்வளவு !

பட்டுக்கோட்டை
20-6–75 கி.சு. தியாகசுந்தரம்

---

# பாடசாலைகளுள் ராஜா

பரம கருணாமூர்த்தியான காஞ்சி ஆசார்யாள், 'வேதோ நித்யம் அதீயதாம்' என்ற ஸ்ரீ பகவத்பாதாளின் ஆக்ஞையை நமக்கெல்லாம் அடிக்கடி ஞாபகப்படுத்தி வருகிறார்கள். வேதத்வனி ஒன்றினால்தான் உலக க்ஷேமம் ஏற்பட முடியும் என்பதை உணர்த்துவதே போல் ஆங்காங்கே வேத பாடசாலைகளை நிறுவி வருகிறார்கள். வேத அத்யயனம் செய்தவர்களையும் செய்ய முன்வருபவர்களையும் சன்மானத்துடன் அனுக்ரஹித்து வருகிறார்கள்.

அவர்களின் ஆக்ஞைப்படி நடந்து வரும் ஒரு நிறுவனம் கும்பகோணம் ராஜா வேத பாடசாலை. இங்கே அண்மையில் பட்டமளிப்பு விழா நடந்தது. அத்யயனத்தைப் பூர்த்தி செய்து செல்லும் ஆறு வித்யார்த்திகளைச் சென்னை உயர் நீதிமன்ற நீதிபதி ஸ்ரீ சேதுராமன் மனமாரப் பாராட்டினார். ஒவ்வொருவருக்கும் ரொக்கப் பரிசும் யோக்யதா பத்திரமும் வழங்கினார்.

மகான் கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் வேதங்களையும் சாஸ்திரங்களையும் ஒருங்கே பயில்வதற்காக நிறுவப்பட்ட இப்புனித கலைக் கோயிலின் இன்றைய நிர்வாகக் குழுத் தலைவர் டாக்டர் லக்ஷ்மிகாந்த சர்மா வரவேற்புரை நிகழ்த்தினார்.

பல பிரமுகர்களும் வேத வித்பன்னர்களும் விழாவுக்கு வந்திருந்து சிறப்பித்தனர்.

வேத நாதம் ஒலிக்கட்டும்; வேதங்கள் திரட்டும்; தர்மம் தழைக்கட்டும்; தரணி சிறக்கட்டும்!



# அக்காவின் அழகு

ஜெயந்தி

ரமணனுக்குக் கல்யாணமான அன்று இரவே விநோதமான அநுபவம். மனைவி ரேணுகாவிடம் தனித்திருக்கும் வாய்ப்புப் பெற்ற போது அவன் அவள் கரத்தை ஆசையோடு பற்றினான். "சந்தன நிறத்தில் எத்தனை அழகான கை!" என்று வியந்து கூறினான். "சந்தனம் பூசிய இடமே தனித்துத் தெரியலை பார்த்தியா?"

"இதைப் போய்ப் பெரிசாச் சொல்றீங்களே, என் தங்கையின் உடம்பு நிறத்தை விடவா? தந்தம்னு தந்தம்தான்!" என்றாள் ரேணுகா.

ரமணனுக்கு என்னமோ போலிருந்தது. ஆனால் அதே சமயம், ஒரு கிளுகிளுப்பும் ஏற்பட்டது. "அப்படியா? உன் தங்கை அத்தனை அழகா?" என்றான்.

அவள் பானுவை இன்னும் சற்று வர்ணித்தாள்.

கல்யாண இரவு மட்டுமல்ல, தனிக் குடித்தனம் போன பிறகும் இந்த நிலை நீடித்தது. ஒரு நாள் ரேணுகாவின் கன்னத்தை ஆசையோடு வருடி ரமணன் சொன்னான், "சந்திரவதனம்" என்று.

"ஐயே! இது என்ன பிரமாதம்? என் தங்கச்சி சிரிக்கும்போது கன்னங்களில் குழி விழுகிற அழகைப் பார்க்கணும். கொள்ளை அழகுன்னு அதுதான்" என்றாள் ரேணு.

தங்கை மீதுள்ள அளவு கடந்த பாசத்தால் அவள் பேசினாள். தன் கணவன் மனத்தில் தன் வார்த்தைகள் விகார எண்ணங்களைத் தோற்றுவிக்கக் கூடும் என்ற சிந்தனையே இல்லாமல் பேசினாள்.

ரமணனோ இது தவறு என்று உணர்ந்தும் இந்த விஷ விளையாட்டில் தொடர்ந்து ஈடுபட்டான். "இந்தா, நான் உன்னை ஆசையா வர்ணிக்கும் போது உன் தங்கச்சியை ஏன் இழுக்கறே?" என்று அவன் அதட்டிச் சொல்லவில்லை. மாறாக வேண்டுமென்றே ரேணுகாவை மேலும் மேலும் வர்ணித்தான். தொடர்ந்து அவள் தன் தங்கையின் அழகைப் போற்றுவதைக் கேட்டுக் கிளுகிளுத்தான்.

"எத்தனை செழுமையான உடம்பு உனக்கு" என்றான் அவன் தன் மனைவியிடம். உடனே அவள் தன் தங்கை பானு எந்த அழகுப் போட்டியில் கலந்து கொண்டாலும் முதல் பரிசு பெறுவாள் என்றாள். பாரம்பரியப் பண்பாடுதான் அழகுப் போட்டிகளில் அவள் கலந்து கொள்ளக் குறுக்கே நிற்பதாகக் கூறினாள்.

"நானே பானுவுக்கு எத்தனை தடவை எண்ணெய் தேய்த்து விட்டிருக்கிறேன். எனக்குத் தெரியாதா?" என்றாள்.

ஒருநாள் ரமணன் பூ வாங்கினான், மனைவிக்கு. கூடவே பானுவின் ஞாபகம் வர அவளுக்கும் சேர்த்து வாங்கினான். வீடு திரும்பும் வழியில் மாமனார் சபேசன் வீட்டுக்குப் போய்ப் பானுவிடம் கொடுத்தான். "ரேணுவை அழைச்சு வரலியா?" என்று மாமியார் கேட்டாள்.

"இல்லை. வீட்டுக்குப் போய் அவளையும் அழைச்சுக்கிட்டு வரதுன்னு ரொம்ப லேட் ஆயிடும். நானாவது வர வழியிலே உங்களையெல்லாம் பார்த்துட்டு வந்தேனே என்று ரேணு சந்தோஷப்படுவா" என்றான்.

பானு கொண்டு வந்து கொடுத்த காப்பியை ருசித்த போது அவள் தலையைத் தான் வாங்கி வந்திருந்த பூ அலங்கரிப்பதையும் பார்த்து ரசித்தான். விடைபெற்றுக் கொண்டு வீடு திரும்பினான்.

நடந்ததை ரேணுவிடம் அவன் கூறிய போது அவள், "எனக்கு எதுக்கு நாலு முழம் பூ? இன்னும் இரண்டு முழம் தங்கச்சிகிட்டேயே கொடுத்திருக்கக் கூடாதா? பானு தலைநிறையப் பூ வைச்சுக்கிட்டா ரதி மாதிரி இருப்பாளே?" என்றாள்.

'ஆமாம், பார்த்தேன். ரதியேதான்' என்று எண்ணிக் கொண்டான் ரமணன்.

இப்படியே பானுவின் அழகை ரேணு வர்ணிப்பதைக் கேட்டுக் கேட்டு விகார உணர்வுகளை வளர்த்துக் கொண்டு விட்ட ரமணனுக்குப் பானுவைப் பெண் பார்க்க வருகிறார்கள் என்று கேள்விப்பட்டதும் அடக்க மாட்டாத பொறாமை ஏற்பட்டது. மனோவிகார நெருப்பு பொறாமைப் புகையைக் குபுகுபுவென்று கிளப்பி விட்டு விட்டது. எப்படியாவது இந்தக் கல்யாணத்தை நிறுத்தி விடவேண்டும் என்று தீர்மானித்து விட்டான்.

பானுவுக்குக் கணவனாகப் போகிற கார்த்திக் ஒரு பாங்க் ஆபீஸர். அதே பாங்கில் தனக்குத் தெரிந்தவர்களிடம் பேச்சுக் கொடுத்துச் சில விவரங்களைச் சேகரித்தான் ரமணன். அதோடு ஒரு சனிக்கிழமை பிற்பகலில் கார்த்திக்கைப் பின்தொடர்ந்து ஸி. ஐ. டி. வேலை செய்தான்.

கார்த்திக் நண்பர்களுடன் அன்று மத்தியானம் ஓட்டலில் சாப்பிட்டான். நண்பர்களில் பெண்மணிகளும் இருவர். மாலாவும் புஷ்பாவும் அதே பாங்கில் வேலை செய்பவர்கள். மவுண்ட்ரோட்டில் சில கடைகளில் நண்பர் குழாம் நுழைந்து பொழுதைப் போக்கி விட்டு மாலையில் சினிமா சென்றது.

ரமணன் பொறுமையாகக் காத்திருந்தான். இரவு படம் முடிந்து அந்தக் கோஷ்டி

இரண்டாகப் பிரிந்தது. புஷ்பாவுடன் வேறு இருவர் ஒரு டாக்ஸியில் ஏறினர். கார்த்திக் மாலாவுடன் ஓர் ஆட்டோவில் ஏறினான்.

இது போதாதா ரமணனுக்கு? மறுநாள் ஞாயிற்றுக் கிழமை சாவகாசமாக மாமனார் வீட்டுக்குச் சென்றான். ''பானுவுக்கு இந்த வரன் வேண்டாம். கார்த்திக் கண்ட கண்ட பெண்களுடன் ஊர் சுற்றுகிறவன். அவன் பாங்கிலேயே மாலா என்று ஒரு பெண். அவளுக்கும் இவனுக்கும் நீண்ட நாட்களாகவே தொடர்பு உண்டாம். நானே பல தடவைகளில் அவர்கள் டாக்ஸியிலும் ஆட்டோவிலும் போவதைப் பார்த்திருக்கிறேன்'' என்றெல்லாம் அளந்தான்.

கல்யாணம் நின்றுவிட்டது. பானு ரேணுவிடம் வந்து பிழியப் பிழிய அழுதாள். ''அத்தான் ஏன் இப்படி நடந்து கொண்டார்? எனக்குப் புரியவே இல்லை'' என்றாள்.

ஞாயிற்றுக் கிழமை ரமணன் மாமனாரிடம் போய்க் கார்த்திக்கைப் பற்றித் தாறுமாறாகப் பேசி விட்டுத் திரும்பிய பிறகு, கார்த்திக்கே அங்கே போயிருக்கிறான். சபேசன் உடைத்துக் கேட்டு விட்டார். அப்போது கார்த்திக்கும் மனம் விட்டுப் பேசியிருக்கிறான்.

ஆண்களும் பெண்களும் சேர்ந்து வேலை செய்கிற காரியாலயங்களில் இப்படி கோஷ்டியாகச் சினிமாவுக்குப் போவது சகஜம். இரவு ரொம்ப நேரத்துக்குப் பிறகு புஷ்பாவோ மாலாவோ தனியே டாக்ஸி ஆட்டோவில் போகத் தயங்குவார்கள். பெண்மணிகளை முதலில் இறக்கி விட்டுவிட்டுப் பிறகு ஆண்கள் தங்கள் வீட்டுக்குப் போவார்கள். சேர்ந்து போவதால் டாக்ஸி செலவும் மிச்சம். இதற்கு வேறு தவறான அர்த்தங்கள் ஏதும் கற்பிக்க வேண்டாம் என்று கார்த்திக் கேட்டுக் கொண்டான்.

ஆனால் சபேசன், ''அது என்னவோ ஐயா; என் மாப்பிள்ளை சொல்லி விட்டாரு. நான் அவரை எப்படிப் பகைச்சுக்கிறது?'' என்று கூறி விட்டார்.

கார்த்திக்கைப் பார்த்த மாத்திரத்தில் பானு அவனிடம் தன் மனத்தைப் பறி கொடுத்து விட்டாள். ஜாதகம் பொருத்தம், கல்யாணம் நிச்சயம் என்ற நிலையில் சற்றுத் தாராளமாகப் பேசிப் பழகியும் இருந்தாள். இப்போது திடீரென்று கல்யாணம் இல்லை என்றதும் பானுவுக்கு இதயமே வெடித்து விடும்போலாகி விட்டது.

இதையெல்லாம் அக்காவிடம் பானு கூறி அழ, ரேணு அவளைச் சமாதானப்படுத்தினாள். ''தைரியமாயிரு பானு. அசட்டுத்தனமாகக் கிணறு குளத்தைத் தஞ்சமடையாதே! நான் கவனிக்கக்கறேன்'' என்று கூறி அனுப்பினாள்.

ஒருநாள் இரவு, பரபரப்புடன் ரமணன் வீடு திரும்பி வந்து ரேணுவிடம் சொன்னான்: ''உன் அப்பா கார்த்திக்குக்குப் பதிலா வேறு மாப்பிள்ளை தேடறாரே பானுவுக்கு, தெரியுமில்லே? அருண்னு ஒரு காலிப் பயலை இப்பப் பிடிச்சிருக்கார். அவனுக்கு சிகரெட் பிடிச்சுக்கிட்டு ஊர் சுத்தறதே வேலை!''



"இதென்ன கூத்து" என்றாள் ரேணு. "அவர் ஸேல்ஸ்மன், ஊர் சுத்தாமல் என்ன செய்வார்? சிகரெட் பிடிக்கிறது அத்தனை பெரிய குற்றமா? லோகத்தில் எத்தனையோ பேர்...."

"சீச்சீ! என்ன உளறுகிறாய்! சிகரெட் பிடிக்கிறவன் குடிக்க மாட்டான்னு என்ன நிச்சயம்? குடிக்கிறவன் ஸ்திரீ லோலனாய் இருக்க மாட்டான்னு எப்படிச் சொல்றது? என்னுடைய பானுவை இப்படிப்பட்டவன் கிட்டே தள்ளிவிட நான் சம்மதிக்கவே மாட்டேன்!"

பளிச்சென்று ஏதோ புரிவது போலிருந்தது ரேணுவுக்கு. 'என்னுடைய பானு' என்று உரிமை கொண்டாடுகிறாரே இவர்? இதற்கு என்ன அர்த்தம்?

தனது அசட்டுத்தனத்தை நன்றாக உணர்ந்தாள் ரேணு. தங்கையை ஓவர்டோபாக வர்ணித்து அவள் அழகைச் சிலாகித்துத் தன் கணவனிடம் பேசியது தவறு என்று கண்டாள்.

"ஆமாம் பெரிய பானு! இத்தனை பரிந்து, பார்த்துப் பார்த்துச் செய்ய வேண்டிய தகுதி அவளுக்கு என்ன இருக்கு?" என்று கேட்டாள் ரேணு.

"என்ன அப்படி சொல்லிட்டே? பானுவின் அழகுக்கு..."

"அழகு இருந்தால் போதுமா? குணம்? அவள் கார்த்திக்கை மனமாரக் காதலிச்சா, பேசிப் பழகவும் செய்தா. அப்படியிருக்க இப்போ அப்பா வேறு வரன் பார்க்க இவ எப்படி சம்மதிச்சா? நானு இருந்தா தூக்கிலே தொங்குவேனே தவிர மனசாலே ஒருத்தரை வரிச்சப்புறம்...சே!"

அதிர்ச்சியாக இருந்தது ரமணனுக்கு. 'பூ! பானு இவ்வளவுதானா! இப்படிப்பட்டவளுக்காகவா நாம் மனசுக்குள் உருகித் தவித்தோம்?'

"ஆமாம் ரேணு! பானு உன்னை விட அழகா யிருக்கலாம்; ஆனால் அக்காவின் மன அழகு அவளுக்கு வருமா?" என்றான் ரமணன்.

"நீங்க கார்த்திக்கை எவ்வளவுதான் பழித்துச் சொன்னாத்தான் என்ன? பானு அவனைத்தான் கல்யாணம் கட்டிப்பேன்னு ஒற்றைக் காலில் நிக்க வேணுமா?"

"அதுதானே கேக்கறேன்!" என்றான் ரமணன்.

"வாங்க, இப்பவே போய் அவளுக்குப் புத்தி சொல்லிட்டு வருவோம்" என்றாள் ரேணு.

"நீ பானுவிடம் போய்ப்பேசு. நான் கார்த்திக்கிடம் போய், 'ஏண்டா மடையா! நான் ஏதாவது சொன்னாலும் கூட நீ உன் காதலில் உறுதியாய் நிக்க வேணுமா? பானுவைத்தான் கட்டிக்குவேன்னு சத்யாக்கிரஹம் பண்ண வேண்டாமா?'ன்னு கேட்டுட்டு வரேன்" என்று கிளம்பினான் ரமணன்.

**இவரைப் பத்தி xxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxx**

## அதிபர் அமீன்

உகாண்டாவில் உள்ள பிரிட்டிஷ் விரிவுரையாளர் டெனிஸ் செஸில் ஹில்ஸ் என்பவரின் உயிர், உகாண்டா அதிபர் ஜெனரல் அமீனின் கையில் ஊசலாடுகிறது. உகாண்டா பற்றி டெனிஸ் ஹில்ஸ் எழுதியுள்ள அச்சாகாத நூலில் 'ஒரு கிராமியக் கொடுங்கோலன் மாதிரி நடந்து கொள்வதாக' உகாண்டா அதிபர் அமீனைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளாராம்! அது தேசத் துரோகமாம்! திரு டெனிஸ் மீது கருணைகாட்டும்படி பிரிட்டிஷ் அரசி எலிசபெத் கோரியுள்ளார்.



ஆப்பிரிக்காவில் உள்ள உகாண்டா எழுபது ஆண்டுகளுக்கு மேல் பிரிட்டனின் பாதுகாப்பிலிருந்து வந்த நாடு. 9-10-1962ல் விடுதலை பெற்றது. 1971ல் ராணுவத்தின் மூலம் நிகழ்த்திய அரசியல் சதியில் வெற்றி பெற்று மில்டன் ஒபோடேயைப் பதவி இழக்கச் செய்து அதிகாரத்தைக் கைப் பற்றினார் அமீன். பிரிட்டிஷ் பாஸ்போர்ட்டுடன் உகாண்டாவில் தங்கியிருந்த ஆசிய மக்கள் அனைவரையும் (சுமார் 25,000 பேர்) வெளியேற்றும்படி 1972ல் உத்தரவு பிறப்பித்தார். உகாண்டாவில் பிரிட்டிஷாரின் வசமிருந்த நிறுவனங்களை யெல்லாம் ஜெனரல் அமீன் கைப்பற்றினார். அமெரிக்கா, கனடா முதலிய பல நாடுகள் உகாண்டாவின் அபிவிருத்தித் திட்டங்களுக்கு உதவ மறுத்துவிட்டன. அமெரிக்கா தன் தூதரைத் திருப்பி அழைத்துக் கொண்டது. ஆனால் சுற்றியுள்ள ஆப்பிரிக்க நாடுகளில் இவரது செல்வாக்கு வளர்ந்தது. அரபு நாடுகளின் உதவியைப் பெறும் நோக்குடன் அந்நாடுகளுடன் நட்புக் கொள்ள விழைந்தார். ஆனால் திடீரென்று அமீனின் மனம் மாறிவிட்டது. லிபியாவிடமிருந்து மேற்கொண்டு கடன் ஏதும் பெறுவதை ஒதுக்கிவிட்டார்! 'பணக்கார நாடாக, ஆனால் பிறநாட்டின் கட்டுப்பாடுகளுக்கு அடங்கிச் செயல்படுவதைவிட, ஏழை நாடாகவும், சுயேச்சையாகவும் இருப்பது மேல்' என்று முழங்கினார் அமீன்.

ஜெனரல் அமீன் ஒரு டாகுமெண்டரி திரைப்படத்தில் தோன்றியுள்ளார். படம் முழுவதும் அமீனின் வீர தீரப் பிரதாபங்களைச் சித்திரிப்பதாகும். 1925ல் பிறந்த இடி அமீன் தாதாவுக்கு ஐந்து மனைவிகள்!

பிரிட்டனின் அயல்நாட்டு விவகாரக் காரியதரிசி திரு ஜேம்ஸ் கால்லகன் தம்மை நேரில் வந்து காணத் தவறினால் திரு டெனிஸ் ஹில்ஸ் இன்னும் பதினொரு நாட்களுக்குள் சுட்டுக் கொல்லப்படுவார் என்று ஜூன் 23ம் தேதி இறுதி அறிக்கை விடுத்துள்ளார், ஜெனரல் அமீன். என்ன நடக்கப் போகிறதோ?

—பாணன்

# சாலை நிறைய நீர் ஓடினாலும் உங்கள் கார் நிற்க வேண்டியதில்லை...

**இம்மாதிரி அவசர வேளைகளில் சமாளிப்பது எப்படியென்ற குறிப்புகள் தருகிறது ஃபயர்ஸ்டோன்**



மழைக் காலங்களில், சாலைகள், சில சமயம் ஏரிபோல் தோன்றலாம். கலவரமடையாதீர்கள். எங்கள் இலவசப் புத்தகம், அவசர வேளைகளில் எப்படிச் சமாளிப்பது என்பதை விளக்குகிறது. அதாவது, நீர் நிறைந்த சாலைகளில் பத்திரமாய் கார் ஓட்டுவது, ஈரமான சாலையில் வழுக்காமல் செல்வது என்பவை பற்றி; பழைய டயர்கள், இம்மாதிரி வேளைகளில் ஆபத்தானவை. உங்கள் டயர்களைக் கவனித்துப் பாருங்கள். புதியவை வேண்டுமானால் ஃபயர்ஸ்டோன் வாங்குங்கள். உங்கள் பணத்தின் முழு மதிப்பையும் பெறுங்கள்.

ஃபயர்ஸ்டோன் டயர்களுக்குள்ள மூன்று சிறந்த தன்மைகளை அறிந்து பாராட்டுவீர்கள்.

- சாலையை அணைத்துச் செல்லும் தன்மை, வேகத்திலும், திருப்பத்திலும், நிறுத்தும் போதும் ஆபத்தில்லாதது.
- உறுதியான ஸ்பிரிங் தன்மை, கரடுமுரடான பாதைகளில் சமாளிக்கக் கூடியது.
- தனிப்பட்ட ''ட்ரிப்பின்-ஸ்ட்ரெச்''துடன் அமைத்திருப்பதால் ஃபயர்ஸ்டோன் டயர்கள் வலுவாய் இருக்கின்றன. இதனால் நீடித்த உழைப்பு.

''பாதுகாப்புப் புத்தகம்—ஃபயர்ஸ்டோனுடன் பத்திரமாய் ஓட்டுங்கள்''. நீங்கள் கேட்டு எழுதினால், விளக்கப் படங்களுடன் கூடிய சிறு புத்தகத்தை இலவசமாய் அனுப்புகிறோம். முகவரி,
ஃபயர்ஸ்டோன் டயர் & ரப்பர் கம்பெனி ஆஃப் இந்தியா ப்ரைவேட் லிமிடெட், உட்ஸ் ரோட், மதராஸ் 600 002.
இப் பத்திரிகையின் பெயரையும் குறிப்பிட்டு எழுதவும்.




## ஃபயர்ஸ்டோன் டயர்கள்

இந்திய சாலைகள், மற்றும் போக்குவரத்து நிலைகளுக்கேற்ப இந்தியாவில் தயாரிக்கப்படுகின்றன.

RADEUS/FS-17

## திரு ஆர். குருமூர்த்தி

எல்லாரும் அலுவலகத்துக்குச் செல்லும் காலை நேரம். மின்சார ரயில் வண்டியில் நிற்கவே இடம் இருப்பதில்லை. ஒருவர் தோளில் மற்றவர் இடித்து நிற்கும் நிலை. இந்த விழி பிதுங்கும் நேரத்தில் கூட, ''ஐயா! சாமீ! தருமம்!'' என நம் மீது ஒட்டியபடி வரும் பிச்சைக்காரர்கள் ஏராளம்.

இப்படிப் பிச்சை எடுப்பவர்களில் தொழு நோயால் பீடிக்கப்பட்டவர்கள், தங்கள் நோயைக் காட்டிப் பிச்சை எடுக்கிறார்கள்.

பிச்சைக்காரர்களுக்கு மறு வாழ்வு இல்லம் என்னவாயிற்று? இவர்கள் ஏன் அங்கு குடியேற்றப்படவில்லை? ரயில்வே நிர்வாகமும் மாநில அரசும் இந்தக் கொடுமையை உடனடியாக நீக்க முன்வருமா?

## திரு எஸ். வைத்தியநாதன்

இந்தியாவில் கலப்படம் நீக்கமற நிறைந்திருக்கிறது. சமீபத்தில் எடுத்த புள்ளி விவரப்படி தங்கத் தமிழகம், கலப்படக் கலையில் இரண்டாவது இடம் பிடித்திருக்கிறது!

ஆகா! உயிரைக் காப்பாற்றும் மருந்துகள் முதல், மிளகு வரை கலப்பட சந்நிதானத்தில் ஐக்கியமானவைகளே! இவைகளைச் சாப்பிட்டு நாம் இன்னும் உயிரோடு இருப்பது அதிசயமல்லவா?

## திருமதி விவியன் கணேஷ்

எதை எதில் கலப்படம் செய்கிறார்கள் என்பதைக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் வீட்டுக்கு வேண்டிய பொருள்களை வாங்கும் பெண்களாகிய நாங்கள், வீடு திரும்பியதும் தான், இப்படிக் கலப்படத்தைக் காண்கிறோம்.

சாம்பிள் காட்டுவது ஒன்று, உள்ளே சென்று 'பாக்' செய்து ஒன்று.....

நம்முடைய ஏற்றுமதி வியாபாரத்திலும் ஏமாற்று. சாம்பிள் காட்டுவது வேறு; அனுப்பும் சரக்கு வேறு. இதனால் ஒரு முறைக்குமேல் நம்முடைய பொருள்கள் பல, அயல்நாடுகளுக்குப் போவதில்லை.

## திரு கிருஷ்ணன் அய்யங்கார்

சில மாதங்களுக்குமுன் சைதாப்பேட்டையில் ஒரு வயதான பெண், தெரு மின்சாரக் கம்பத்தில் 'ஷாக்' அடித்ததால் மடிந்த செய்தி 'இந்து'வில் புகைப்படத்துடன் வந்தது.

தெரு மின்சாரக் கம்பங்களில், 'பியூஸ் செட்'டுக்காகக் கம்பத்தின் அடிப் பாகத்தில் இரும்பு மூடிக் கதவுகள் இருக்கின்றன. இவற்றில் ஐம்பது சதவீதம் திறந்தே கிடக்கின்றன. மூடிகளும் ஃப்யூஸ்களும் திருட்டுப் போய் விட்டன!....

பாதாளச் சாக்கடை கனத்த இரும்பு வட்டங்களால் மூடப்பட்டிருக்கும். இப்போது பல இடங்களில் திறந்தபடியே சாக்கடைகள் காட்சி தருகின்றன.

['மக்களின் நல்வாழ்வுக்கு இடையூறு விளைவிக்கும் பல சமூக விரோதச் செயல்கள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. அவற்றில் மிகவும் மோசமானதென்று நீங்கள் கருதும் ஒன்றைப் பற்றிச் சொல்லுங்கள்' என்று சிலரைக் கேட்ட போது.....]





கொடிய சமூக விரோதிகள் இம்மூடிகளைத் திருடிச் செல்கிறார்கள்.

இருட்டில் யாரேனும் சாக்கடைக்குள் விழுந்தால், உயிருடன் மீள முடியுமா?

## திருமதி அலமேலு ராமமூர்த்தி

காய்களின் விலைகள்தாம் விஷம் போல் ஏறியிருக்கின்றன என்றால், அவற்றை எடை போட்டு விற்பவன் மோசடி மிகக் கொடுமையாக இருக்கிறது.

போன வாரம் ஒரு விசேஷத்துக்கு மூன்று கிலோ தக்காளி வாங்கினேன். 'இதோ








**திரு வி. ப. க. மூர்த்தி**

நான் அடிக்கடி பயணம் செய்யும் ஆசாமி. 'சார் பர்த் வேணுமா! மூணு ரூபாய் கொடு சார் !.... இடம் பிடிச்சுத் தரேன்....'' என்கிறார்கள். எப்படித்தான் கையாள்கள் வைத்து இடம் தருகிறார்களோ ? இது கிடக்கட்டும் என்றால் ரயில் பிளாட்பாரங்களில் நடக்கும் வியாபாரங்கள், இப்போது பகல் கொள்ளையாயிருக்கின்றன.

'நெஸ் காப்பி' எனச் சொல்லி ஐம்பது காசு வாங்கி, அரை கிளாஸ் காப்பி, புளியங்கொட்டை காப்பி தருகிறார்கள் ! 'பிரிட்டானியா பிஸ்கட்' எனக் கூவித் தவிடு கலந்த பிஸ்கட் விற்கிறார்கள். ஒரே குமட்டல்.

ஒரு ஸ்டேஷனில் பிரபல கம்பெனியின் சோடா என்று ஒருவன் தந்ததை வாங்கிக் குடித்தேன். துர்நாற்றம் வீசும் தண்ணீர் அடைக்கப்பட்டிருந்தது!

**திருமதி நிர்மலா**

ஒரு நாள். இரண்டு பெண்களும், ஓர் ஆணும் ஒவ்வொரு வீடாக வந்தார்கள். மூவரும் 'டீக்'காக உடுத்தியிருந்தார்கள். என் வீட்டுக்கும் வந்தார்கள். ''அம்மா! ஸ்டீல் பீரோ, நாற்காலி, சோபா – கம் – பெட், ஃபேன், சைக்கிள், பர்னிச்சர்கள் தேவையா? தவணையில் தருகிறோம்....'' என்றார்கள்.

ஒரு நிறுவனப் பெயர் அச்சடித்த நோட்டீஸ், விசிட்டிங் கார்டு, ஆர்டர் புத்தகம் முதலியன அவர்களிடம் இருந்தன.

கணவர் அனுமதியில்லாமல் நான் எந்தப் பொருளும் வாங்காதவள். ஆகவே 'வேண்டாம்' என்று அனுப்பிவிட்டேன். தொடர்ந்து அக்கம் பக்கத்து வீடுகளுக்குப் போனார்கள்.

அடுத்த வாரம் பக்கத்துத் தெருவில் உள்ள சிநேகிதியின் வீட்டுக்குப் போனேன். ''சோபா-கம்-பெட் ஆர்டர் தந்திருக்கிறேன். ரூ.145. தவணை முறையில் மாதம் ரூ. 18'' என்று சொன்னாள். என்னிடம் அச்சடித்த ஆர்டர் தாளைக் காட்டினாள். ''அங்கத்தினர் நுழைவுக்கட்டணமும் முதல் தவணையும் கட்டியிருக்கிறேன்'' என்றாள். அதன்பிறகு வருடம் ஒன்றாகியும் 'சோபா கம் பெட்' அவர்களுக்கு வரவில்லை. அப்படி ஒரு நிறுவனம் இருந்தாலல்லவா ?

பேட்டி: ஏ. சுவாமிநாதன்

பார், அம்மா' என்று சொல்லித் தக்காளியை நிறுத்துப் பையில் போட்டான்.

வீட்டுக்கு வந்ததும் என் மாமியார், ''இது மூணு கிலோவா? இருக்காது...... இரண்டு கிலோதான் இருக்கும்....'' என்றார்.

உடனே பக்கத்து ஸ்டோரில் தராசு தருவித்து நிறுத்துப் பார்த்தோம். மாமியார் சொன்னதில் ஒரு சிறு திருத்தம். சரியாக இரண்டேகால் கிலோதான் இருந்தது !

தவறு, ஒன்று எடைக் கல்லில் இருக்கும் அல்லது தராசு பிடிக்கும் லாகவத்தினால் நம்மை ஏய்ப்பார்களாயிருக்கும். இரண்டு விதமாகவும் ஒரே சமயத்தில் ஏமாற்றுபவர்களும் உண்டு !

# சமுதாய விரோதிகள்!

# மலரும் பூவெனப் பிள்ளை வளர்ந்திடப் பலமான துணை—

# இன்க்ரிமின்*

இளமைப் பருவம்—பூவாய் மலரும் நாட்கள்—மலர்ந்து சிரித்து உங்கள் மனத்தை அள்ளி வளரும் பருவம்...இப் பருவத்தில் அவனுக்குக் கட்டாயம் தேவை—இன்க்ரிமின். பின்னர் பாருங்களேன் அவன் வளர்ச்சியை! பசித்துப் புசிப்பான்... உண்ணும் உணவெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக மாறும். நலம் தரும் வைட்டமின்கள், இரும்புச் சத்து, இவற்றோடு உங்கள் மகனின் வளர்ச்சிக்கு மிகமிக அத்தியாவசியமான அமினோ அமிலம், லைஸின் யாவும் நிறைந்தது இன்க்ரிமின்.




## இன்க்ரிமின்* டானிக்

டிராப்ஸ்: 2 மாதங்கள் முதல் 2 வயது வரையில்
ஸிரப்: 14 வயது வரையில்

## உணவையெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக்கும்
## உங்கள் பிள்ளை பூவாய் மலர்ந்து சிரிக்கும்!

டாக்டர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமான பெயர்—
Lederle ஸயனமிட் இந்தியா லிமிடெடின் ஒரு பிரிவு
*அமெரிக்கன் ஸயனமிட் கம்பெனியின் ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க்

முனிவர்களும் பெரியவர்களும் இட்ட சாபங்கள் பலித்ததாகப் புராணக் கதைகளில் படித்திருக்கிறோம். இந்தக் காலத்திலும் பெரியவர்கள் இடும் சாபங்கள் பலிக்கக் கூடும். 'எப்படி?' என்று கேட்கிறீர்களா? இதோ இருக்கிறது விடை!

# சாபங்கள் பலிக்கும்!..















"விசிலா அடிக்கிறே! உன் ஆயுசு பூரா விசில் அடிச்சுண்டேதான் இருக்கப் போறே பார்!"


"மகராஜி, தொண்டையைக் கிளப்பிட்டாளே! இனி எட்டு ஊருக்கும் கேட்கும் போ!"


என்னடா கையெழுத்து இது-தலையெழுத்து மாதிரி!...பிற்காலத்திலே ரொம்பப் பேரை நீ திண்டாட விடத்தான் போறே!
டாக்டர்

பால் பண்ணை
படம்:

"வீட்டுப் பாடம் எழுதிண்டு வரல்லியா பெரியவனதும் மாடு மேய்க்கறதா உத்தேசமா!"



# பொன்னியின் புதல்வர்

சுந்தா

## 49. கர்நாடக விஜயம்

**ஆய கலைகளைப் பேணி வளர்த்திட**
**ஆக்கலும் வேண்டும் ஆய்தலும் வேண்டும்**

"இதோ ஒரு பெர்னார்ட் ஷா தமிழ் நாட்டில் இருக்கிறார்'' என்பதாக, ''ஓரிரவு'' என்ற ஒரு நாடகத்தைக் கல்கி பார்த்துவிட்டு விமரிசனம் செய்கையில் அந்த நாடகத்தின் ஆசிரியரைப் புகழ்ந்து எழுதினார். அவ்விதம் புகழ்ச்சிக்கு உரித்தானவர், ''அண்ணா'' என்று மரியாதையுடனும், ''அறிஞர்'' என்று மதிப்புடனும் தமிழரில் பலரும் போற்றும், சி. என். அண்ணாதுரை. ''கர்நாடகம்'' என்ற புனைபெயருடன், அந்த நாடகத்துக்குக் கல்கி எழுதிய விரிவான விமரிசனம், 9–12–47 கல்கி இதழின் ''ஆடல் பாடல்'' பகுதியில், அண்ணாதுரையின் படத்துடன் வெளியாயிற்று..... அதைப் படித்த அண்ணாதுரையும் அவருடைய கட்சியினரும், கொள்கை வேற்றுமையை மறந்து கலையைப் பாராட்டும் கல்கியின் பண்பைக் கண்டு வியந்தார்கள்; இன்னமும் அண்ணாதுரையின் கலைத் திறமை பற்றிப் பேசுவோர், கல்கியின் அந்தப் பாராட்டைக் குறிப்பிடுகிறார்கள்; மாற்றான் தோட்டத்து மலரிலும் மணத்தை நுகர்ந்துமெச்சியவர் கல்கி என்கிறார்கள்.

அண்ணாதுரையைப் பெர்னார்ட் ஷாவுடன் ஒப்பிட்டு எழுதியதற்குச் சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னால், ''கர்நாடகம்'' என்ற புனைபெயரைச் சூட்டிக் கொண்டார் கல்கி. கர்நாடகம் எழுதியவற்றைப் படித்து வருகையில், அவரையே பெர்னார்ட் ஷாவுடன் ஒப்பிடத் தோன்றியது. நாடகம் ஏதேனும் எழுதியதற்காக அல்ல; நாடகம், நாட்டியம், சங்கீதம் முதலிய அரங்குக் கலைகளைப் பற்றிய விமரிசனங்களை ஷாவைப் போல் எழுதியதற்காக.

பெர்னார்ட் ஷா ஒரு நாடக ஆசிரியராகப் பேர் எடுத்ததற்கு முன்னால், சுமார் பத்தாண்டு காலம், லண்டன் நகரத்து ஆடல் பாடல் நிகழ்ச்சிகளைப் பார்த்தும் கேட்டும், அடுக்கடுக்கு மூன்று பத்திரிகைகளில் விமரிசனங்கள் எழுதினார். அதற்கென அவர், ''கார்னோடி பஸெட்டோ'' என்ற ஓர் இசைக் கருவியின் பெயரைப் புனைபெயராய்க் கொண்டிருந்தார். அதற்கு உள்ளே அவர் ஒளிந்து மறைந்திருந்து, கலை சம்பந்தமான தமது விருப்பு வெறுப்புகளை ஒளிவு மறைவின்றி ஆலாபனம் செய்தார். தமக்குப் பிடித்தவற்றை மேல் ஸ்தாயியில் போற்றினார்; பிடிக்காதவற்றை ஒரே இறக்காக இறக்கினார். அவர் போற்றினாலும் சரி, தூற்றினாலும் சரி, அவருடைய விமரிசனங்கள் நகைச்சுவையும், நடைவண்ணமும் நிறைந்த இலக்கியக் கட்டுரைகளாய் இருந்தன; ஷாவின் தனிப் பண்பு என்ற ''ஷாத்தனம்'' அவற்றில் பொங்கி நின்றது.

தமது வாழ்க்கையின் சிறியதொரு பகுதியில்தான் கார்னோடியாக இருந்தார் ஷா; கல்கியோ பெரியதொரு பகுதியிலும் இறுதி வரையிலும் இருந்தார்.

கர்நாடகமாகக் கல்கி விஜயம் செய்த காலம், தமிழ் நாட்டில் ஆடல் பாடல் கலைகளின் நிலை அதற்கு வாய்ப்பாக இருந்தது; அல்லது, அந்த வாய்ப்பான நிலைதான் கர்நாடக விஜயத்துக்குக் காரணமாய் இருந்தது என்றும் சொல்லலாம். கர்நாடகத்தின் பேனா, ஆனந்த விகடனின் ''ஆடல் பாடல்'' பத்திகளில் ஓடியாடிச் சாடத் தொடங்கியபோது அந்தப் பேனாவே எழுதியது போல் –

நமது நாட்டில் தற்சமயம் கலை வளர்ச்சித் துறையில் ஒரு புதிய ஊக்கமும் உற்சாகமும் தோன்றியிருப்பது வெளிப்படை. இது தேசிய சுதந்திர இயக்கத்தின் பின் விளைவு என்பதாகச் சிலர் அபிப்பிராயப்படுகின்றனர். இதன் உண்மை எப்படியானாலும், புத்துயிரின் அறிகுறிகள் காணப்படுவது என்னமோ உண்மை. அப்புத்துயிரானது இலக்கியம், சித்திரம், சங்கீதம், நடனம், நாடகம் ஆகியவைகளில் பொங்கி வழிந்து கொண்டிருப்பதைக் காண்கிறோம்.

கலைகளில் சிறந்ததாகிய சங்கீதக் கலைதான் அபரிமிதமாக ஜனங்களின் மனத்தைக் கவர்ந்

1. வயது கொஞ்சமா நஞ்சமா? [illegible] ஆகிறது! ஆனாலும் பாட்டு எத்தனை பாட்டு!

2. தமிழ்நாட்டு பெர்னார்ட் ஷா.

3. ''[illegible]!''







திருக்கிறது. முன்னெப்போதையும் விட இப்போது சென்னையில் சங்கீத சபாக்களில் கூட்டம் அதிகம் சேர்கிறது. அப்படி வருவோர் சும்மா ஜம்பத்துக்கு வந்துவிட்டுப் போகிறவர்கள் அல்ல. பெரும்பாலானவர்கள் ரஸிகர்கள்.

இதை அடுத்து, ரஸிகர்கள் யார் என்பதற்குக் கர்நாடகம் விவரணம் கூறினார் :

ரயிலில் மூன்றும் வகுப்புப் பிரயாணிகள் தான் தொகையில் அதிகம். அவர்கள்தான் அதிகப் பணமும் கொடுப்பவர்கள். சங்கீதத்திலும் அப்படித்தான்.

இந்த மூன்றும் வகுப்புப் பிரயாணிகளைத் தான் நான் ''ரஸிகர்கள்'' என்று சொல்கிறேன். இவர்களுக்குச் சங்கீத ஞானம் உண்டு; சங்கீதம் கேட்டுக் கேட்டுப் பண்பட்ட செவிகளை உடையவர்கள். ஆனால் பண்டிதர்களைப் போல் தப்பு எங்கே விழப் போகிறது என்று பார்த்துக் கொண்டிருக்க மாட்டார்கள். இவர்களுக்குப் பாடகரின் குரல் இனிமையாக இருக்க வேண்டும்; ஆனால் அதுமட்டும் போதாது. சங்கீதமும் உயர்தரமாக இருக்க வேண்டும். ராகங்களை மனோதர்மத்துடனும் ராக பாவம் தோன்றவும் பாட வேண்டும். கீர்த்தனங்களை அதற்குரிய காலங்களில், வேண்டிய அளவு சங்கதிகளுடன் அக்ஷர சுத்தத்துடன் பாட வேண்டும். தெரிந்த பாஷையில் உணர்ச்சியுடன் அர்த்த பாவம் தோன்றப் பாடினால் 'அதி விசேஷம்' என்று கொண்டாடுவார்கள். ஸ்வரங்கள், பல்லவிகள், மிருதங்க, கஞ்சிரா ஆவர்த்தங்கள் எல்லாம் அளவுக்குட்பட்டுப் பாடினால் இவர்கள் அநுபவித்துச் சந்தோஷப்படுவார்கள். அதிகமாய்ப் போனால் வெறுப்படைவார்கள். (ஆ. வி. 5-1-'36)

இவ்வித ரஸிகர்களின் பிரதிநிதியாகத் தான் அவர் இசைக் கச்சேரிகளை விமரிசனம் செய்தார்.

1927ல் தோன்றி வளர்ந்திருந்த சென்னை சங்கீத வித்வத் சபை, மற்றும் மயிலாப்பூர் ரஸிக ரஞ்சனி சபா, இண்டியன் ஃபைன் ஆர்ட்ஸ், ஜகந்நாத பக்த சபை முதலியவற்றின் ஆதரவில் நடந்த கச்சேரிகள் பலவற்றுக்குக் கல்கி சென்று மதிப்புரைகள் எழுதினார். அவருடன் மாலியும் சென்று, அரங்குக் கலைஞர்களையும் சபையின் ரசிகர்களையும் சித்திரங்களாய் வரைந்து கொடுத்தார். எழுத்திலும் படத்திலுமாய் அமைந்த அவர்களுடைய ''ஆடல் பாடல்'' பகுதிகளை, மேலும் மேலும் அதிகமான வாசகர்கள் ரசித்தார்கள். கச்சேரிகளுக்குப் போவோருடன், போகாதவரும் ரசித்தார்கள். சங்கீதத்தில் பிரியம் இல்லாதவர்களும்கூட ரசித்தார்கள்.

பொதுவாக யாரும் மகிழ்ச்சியுடன் படிக்கும்படியாகக் கர்நாடகத்தின் எழுத்து எப்படி உவப்பாக இருந்தது என்பதற்கு ஒரு மாதிரியாக, தொடக்க காலமான 1933ல் வெளியான, தனம்மாளின் வீணை இசை பற்றிய விமரிசனத்தை எடுத்துக் கொள்ளலாம் :

சங்கீத உலகத்தில் எவ்வளவோ அபிப்பிராய பேதங்கள் இருக்கலாம். சங்கீத பண்டிதர்கள் ரஸிப்பதை நம்மைப் போன்ற பாமரர்களால் ரஸிக்க முடியாது. சிலருக்குப் பல்லவி பிடிக்கும்; சிலருக்கு ராக ஆலாபனந்தான் பிடிக்கும்; வேறு சிலருக்குத் துக்கடாக்



**பேஷான் யோசனை!**

பெங்களூரில் வீட்டு வசதி வாரியம் வீடு கட்ட நிலம் கொடுக்கும்போது போடும் ஒரு நிபந்தனை: காம்பவுண்டில் குறைந்தது இரண்டு பழம் தரும் மரங்களையாவது வீட்டுக்காரர் வளர்க்க வேண்டும். செடிகளை வாரியமே இலவசமாகக் கொடுக்கிறது.

டெக்கான் ஹெரால்டு - பாபு

களிலே பிரிதி. வித்வான்களுக்குள்ளும் எவ்வளவோ வித்தியாசங்கள் உண்டு. ஆனால் ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் சங்கீத உலகத்தில் கருத்து வேற்றுமை என்பதே கிடையாது. அது என்னவெனில், கர்நாடக சங்கீதத்தின் சிறப்பைப் பூரணமாய்க் காண வேண்டுமாயின் வீணை தனம்மாளிடம்தான் காணலாம் என்பதுதான். எனினும் சென்ற சில வருஷ காலமாக வீணை தனம்மாளின் பெயரையே எல்லோரும் மறந்து விட்டதாகக் காணப்பட்டது. சமீப காலத்தில் அந்த அம்மாளின் கச்சேரிக்குக் கொஞ்சம் கிராக்கி ஏற்பட்டிருப்பது, தென்னாட்டுச் சங்கீதக் கலை புத்துயிர் பெற்றிருக்கிறது என்பதற்கு ஓர் அத்தாட்சியாகும்...

சங்கீதக் கருவிகளுக்குள்ளே தலைசிறந்தது வீணை என்று சொல்ல வேண்டியதில்லை. பாரத தேசத்தின் சங்கீதத்துக்குச் சின்னமாக விளங்குவது வீணைதான். சங்கீத தேவதை பயிலக்கூடிய வாத்தியம் ஒன்று உண்டானால் அது வீணையாகத்தான் இருக்க வேண்டும். தனம்மாள் வீணை வாசிக்கும்போதோ, சங்கீத தேவதை நமது எதிரில் உட்கார்ந்து வாசிப்பது போலவே பிரமை கொள்கிறோம்.

ஆனால் அம்மாள் பாடும்போது இந்தப் பிரமை நீங்கிவிடுகிறது என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். வயது கொஞ்சமா நஞ்சமா? அறுபதுக்கு மேலல்லவா ஆகிறது? சாரீரத்தில் இனிமை போய்விட்டது. எனவே, வீணையின் இனிமையை மிகைப்படுத்திக் காட்ட அம்மாளின் சாரீரம் பகைப்புலனாகப் பயன்பட்டதென்றே சொல்லலாம். ஆனாலும் அவருடைய பாட்டு எத்தகைய பாட்டு! என்ன பிடிப்பு! என்ன அழுத்தம்! என்ன கமகம்! ஒருவருடைய இருதய உணர்ச்சி முழுதும் பாட்டின் வழியாய் வெளிப்படக் கூடுமானால், அது தனம்மாளின் பாட்டிலேதான். அம்மாளுக்கு இரண்டு கண்ணும் தெரியாது. ஆனால் அவர் பாடும்போது சிற்சில சமயம் அவருடைய கண்களிலிருந்து ஓர் அற்புத ஒளி வெளியாவதைக் காணலாம்.

ஏற்கனவே தெரிந்து கொண்டபடி, தனம்மாள் பேத்தி மூலம் பரத நாட்டியம் அடைந்த மறுமலர்ச்சியும் கர்நாடக விமரிசனங்களின் தொடக்க காலத்தில் நிகழ்ந்ததேயாகும். அந்த மலர்ச்சியின் நிகழ்ச்சிகளும் அந்த விமரிசனங்களில் ஜதிக் கோலமிட்டு நடமாடின.

அந்தச் சமயத்திலேயே இசைக் கலையையும் கலைஞர்களையும் பாதித்த நவீன சாதனம் ஒன்றும் வெகுவாகப் பரவிக் கொண்டிருந்தது. அதுதான் கிராமஃபோன். வீட்டில் இருந்தபடியே வேண்டும்போதெல்லாம் சங்கீதத்தை ரசிப்பதற்கு, ஊமத்தம்பூ வடிவத்தில் ஒலிபெருக்கிகள் பொருத்திய அந்தப் ''பிளேட்டுப் பெட்டிகள்'' வகை செய்தன. முதலில் இசைக் கலைஞர்கள் ''பிளேட்'' கொடுக்கத் தயங்கினார்கள்; பின்னர் போட்டி போட்டுக் கொண்டு கொடுத்தார்கள். அவர்கள் கொடுத்த பிளேட்டுகள் அல்லது இசைத் தட்டுகளையும் தமது ''ஆடல் பாடல்'' பத்திகளில் கல்கி சுழலவிட்டார். (பிளேட்டுகளை இசைத் தட்டுகள் எனத் தமிழில் ஆக்கியவரே அவர்தானோ?)

தரமான இசைத்தட்டுகளை மெச்சியும் தரக் குறைவானவற்றைத் தாக்கியும் அவர் எழுதியது இருக்கட்டும். தம்முடைய எழுத்தின் செல்வாக்கினால், எப்படி கல்கி, மக்களின் மனப் போக்கை மாற்ற முடிந்தது என்பதற்கு இங்கே ஓர் உதாரணம் பார்ப்போம்:

1933 மத்திவாக்கில் கிராமியப் போக்கில் அமைந்த பாட்டொன்று ஓர் இசைத்தட்டில் வந்தது. நாகரிகமும் நேர்த்தியான ருசியும் கொண்டிருப்பதாய்த் தம்மைக் கருதிக் கொண்டவர்கள், அந்தப் பாட்டை மட்டமானதென ஒதுக்கித் தள்ளினார்கள். அதைக் கேட்போரையும் கேவலமாய் எண்ணினார்கள். அது பற்றிய ''கர்நாடக'' விமரிசனம் ஒன்று அவர்களுடைய மனத்தை அடியோடு மாற்றி, நயம்மிக்க பாட்டாக அதைக் கருதச் செய்தது:

''மோரு ஊ மோரு ஊ
நான் மதிச்சியத்திலே குடியிருக்கிறது—
ஏ ஐயா
அந்த மதுரையிலே பாலு விக்கிறது...''

தினம் குறைந்தது ஒரு தடவையாவது ''தயிர்க்காரி'' பாட்டுக் கேட்டு வருகிறேன். இன்னும் அலுக்கவில்லை. அதன் பலனாக என் குடும்ப வாழ்க்கையில் நிகழ்ந்திருக்கும் ஒரு சிறு மாறுதலைக் குறிப்பிடுகிறேன். இதற்கு முன்பெல்லாம் எங்கள் வீட்டுக்குத் தயிர்க்காரி வந்தால் நாலைந்து நிமிஷ நேரம் வாசலில் காத்திருக்க நேரிடும். ''அம்மா, ஐயா!'' என்று அவள் பலமுறை கூவ வேண்டும். ''தயிர்க்காரியை ஏன் காக்க வைக்கிறாய்?'' என்று சில சமயம் நான் கோபித்துக் கொள்ள நேர்ந்தது. இப்போதோ தயிர்

# புதிய அனுபவம், பேரானந்தம்



செஞ்சுரி
பருத்தித் துணிகள்



செஞ்சுரி -100% பருத்தித் துணிகள்

தி செஞ்சுரி ஸ்பின். அண்டு மான்யு.
கம். லிமிடெட், பம்பாய்-400 025

ADROIT/525

காரி வந்த சுவடு தெரியாமல் திரும்பிப் போய்விடுகிறாள்.

''இனிமேல் நான் போய் மிளகாய் அரைக்
கணும்
இரண்டு பிள்ளைக்குப் பால் கொடுக்கணும்
வறட்டி தட்டணும் வெளியே போடணும்
வெந்நீர் வைக்கணும் மேல் குளிக்கணும்
உலையை வைக்கணும் உள்ளதைக் காச்
சணும்
அண்டா குண்டா கொப்பரை சருவம்
அடுக்குப் பாத்திரம் லொட்டு லொசுக்கு
எல்லாம் விளக்கணும் தண்ணீர் நிரப்ப
ணும் — ஐயா
அதுக்கு மேலே கூ அப்பாடி என்று
அடித்துக் கீழே படுக்கணும்''

என்னும் அழகான உள்ளம் உருக்கும் மொழிகளைக் கேட்ட பிறகு யாருக்குத்தான் தயிர்க்காரியைக் காக்க வைப்பதற்கு மனம் வரும்?

சில பாட்டுக்கள் அவைகளுடைய வர்ண மெட்டுக்களின் மோகன சக்தியினால் நமது உள்ளத்தைக் கவர்ந்து விடுகின்றன. அவற்றின் உள் விஷயம் வெறும் உளறலாய் இருந்த போதிலும், மெட்டு மட்டும் காதை விட்டுப் போக மாட்டேன் என்கிறது. ஆனால் தயிர்க்காரி பாட்டில் நம் சிந்தையைக் கவர்வது அதன் மெட்டு மட்டும் அல்ல. விஷயம், மெட்டு, குரலினிமை எல்லாம் முதன்மை ஸ்தானத்துக்கு ஒன்றொடொன்று போட்டி போடுகின்றன.

''நான் புதுசு புதுசா உடை உடுத்தறது
என் புருசன் மனசு போலே முன்னே
நடந்து கொள்ளுறது
நான் காலையிலே தயிரு விக்கிறது — ஏ ஐயா
அந்தக் கடும்பகலில் மோரு விக்கிறது—
வந்து விக்கிறது
நான் மாலையிலே பாலு விக்கிறது
எங்க மாமி என்னை மதிப்பாகவே வைத்துக்
கொள்ளுறது''

என்று பாடும் தயிர்க்காரி நம் மனக் கண் முன் உயர்ந்த காவியங்களில் வரும் கதா நாயகிகளில் ஒருத்தியாகி விடுகிறாள்.

''நான் புறப்பட்டு வரும்போது எந்தப்
பெரிய சனியன் முன்னுக்கு வந்ததோ—
ஐயோ!
கொண்டுவந்த பாலு மோரு தயிரு
கூடையில் அப்படியே இருக்கு விக்கலே
கண்ட இடமெல்லாம் கடனாப் போச்சு''

என்று சொல்லும்போது அவள் முன் வந்த அந்தப் பெரிய சனியனை நாமும் சேர்ந்து சபிக்கத் தயாராகிறோம்.

அகத்தியம், தொல்காப்பியம், நன்னூல், யாப்பிலக்கணம், சிற்றிலக்கண வினா விடை முதலியவைகளை நான் கற்கவில்லையே என்ற கவலை வெகு காலமாக எனக்கு இருந்ததுண்டு. இந்தப் பாட்டைக் கேட்டவுடன், ''நல்ல வேளை! அந்நூல்களைப் படியாமல் தப்பினோம்' என்று சந்தோஷப்பட்டேன். அவைகளைப் படித்திருந்தால், கிராமியக் கொச்சைத் தமிழ் சொற்களால் ஆன இப்பாட்டு நன்றாயிருக்கிறது என்று சொல்ல மனம் வருமா?

(ஆ. வி. 1-6-'33)



**அவர் போட்ட அணுகுண்டு!**

அணு விஞ்ஞானத் திட்டங்கள் பல விதங்களில் மனித சமுதாயத்துக்குப் பேருதவி புரிவனவாக இருக்கின்றன. இவை நிரூபிக்கப்பட்ட விஷயங்கள். ஆனால் அணுகுண்டு வெடிப்பதன் மூலம் யதார்த்த நோக்கிலோ பொருளாதார ரீதியிலோ அமைதிப் பணிக்கோ எந்த விதமான லாபமும் இருப்பதாகத் தெரியவில்லை. அவ்விதம் அது பயன் தரக்கூடும் என்று இதுவரையில் அமெரிக்காவோ, ருஷ்யாவோ அல்லது இந்தியாவோ யாருமே நம்பிக்கை பிறக்கும் விதமாக நிரூபிக்கவில்லை. - கனடா பிரதமர் ட்ரூடோ

(ஹிந்து ஜூன் 20, 1975)

---

மற்றும் ஒரு மாறுதல் நேர்ந்தது அந்தக் காலத்தில்; நற்கலைகளையும் அவற்றின் தரங்களையும், மக்களையும் அவர்களுடைய நெறிகளையும் வெகுவாகப் பாதித்த மாறுதல். அது வரை சினிமாத் திரையிலே ஊமையாய் ஓடிக் கொண்டிருந்த படங்கள், பேசிப் பாடும் படங்களாய் மாறிய மாறுதல்தான் அது.

தமிழ் நாட்டில் டாக்கிகளை எடுத்த புதிதில், அவற்றில் பெரும்பாலானவை புராணக் கதைகளாகவே இருந்தன. அத்தகைய டாக்கிகளில் ஒன்று, அஸன் தாஸ் என்பவர், 1935ல், மூன்று லட்சம் ரூபாய்ச் செலவில் எடுத்த ''பக்த நந்தனார்''. எஸ். ஜி. கிட்டப்பாவுடன் நாடகங்களில் நடித்துப் பெரும் புகழ் கொண்டிருந்த கே. பி. சுந்தராம்பாள், அதிலே நந்தனாராக நடித்தார்—அவருக்குக் கிடைத்த சன்மானம் ஒரு லட்சம் ரூபாய். வேதியராக நடித்தவர் அக்காலத்துப் புகழ்மிக்க சங்கீத வித்வான், மகாராஜபுரம் விசுவநாதய்யர்.

அந்தப் படத்தைப் பற்றி ''கர்நாடகம்'' எழுதிய விமரிசனம் மிக்க பரபரப்பை ஊட்டிற்று. எதனால், எப்படி என்பதைத் தெரிந்து கொள்ள, அதன் சுருக்கத்தைப் பார்த்தாலே போதும்.

இந்த பக்த நந்தனார் படத்தில் நந்தனாரே இல்லை; சுந்தராம்பாள்தான் இருக்கிறார். சுந்தராம்பாளுக்கு வேஷப் பொருத்தம் இல்லை. நீலகிரித் தோடர் போல் இருக்கிறார்.

வேதியர், வேதியரானபடியால் அவருக்கு வேஷம் நன்றாய்ப் பலித்திருக்கிறது.

(பாடல்களைப் பற்றி—)

இவ்வளவு அபஸ்வரங்களை ஸ்ரீமதி சுந்தராம்பாள் இதுநாள்வரையில் எங்கே சேர்த்து



இப்பொழுது இங்லோந்தில் வேகமாகப் பரவி வரும் பாஷன் மூக்குக் குத்திக்கொள்வது.

நியூ எஜ் - கே. ஆர்.

---

வைத்திருந்தார் என்று ஆச்சரியம் உண்டாகிறது. மகாராஜபுரம் விசுவநாத அய்யர், "சிதம்பர தரிசனமா — நீ அதைச் சிந்திக்கலாமா!" என்னும் பாட்டை எவ்வளவு மோசமாகப் பாடக்கூடும் என்பதைத் திருஷ்டாந்தப்படுத்திக் காட்டுவதற்கே பாடியிருப்பதாகக் காண்கிறது.

மொத்தத்தில் இந்த டாக்கியில் குறை என்பதே இல்லாமல் மிகவும் உயர்தரமாய் நடித்திருப்பவர்கள் யாரென்று கேட்டால், (1) தென்னை மரம் (2) எருமை மாடு (3) ஆட்டுக்குட்டி என்றுதான் சொல்லவேண்டும்.

கே. பி. சுந்தராம்பாள், கிரௌன் தியேட்டரில் நடந்த பிரத்தியேகக் காட்சியின் மத்தியில் பேசுகையில் தமக்கு லட்சம் ரூபாய் சன்மானம் கிடைத்ததைப் பற்றிச் சிலர் பொறாமைப்படுகிறார்கள் என்று சொன்னார். டாக்கி நன்றாயிருந்து, ஸ்ரீமதி சுந்தராம்பாளுக்கு இரண்டு லட்சம் ரூபாய் கிடைத்திருந்தாலும் ஜனங்கள் பொறாமைப்படாமல் சந்தோஷமே அடைவார்கள். டாக்கியில் நடிக்காமலிருப்பதற்காக யாராவது அவருக்கு மூன்று லட்சம் ரூபாய் கொடுத்திருந்தாலும் ஜனங்களுக்கு சந்தோஷம்தான்...

நடராஜாவினுடைய நர்த்தனம் என்று சொல்லப்படுவது அருவருப்பு அளிக்கும் ஆபாசமான காட்சி.

இந்த டாக்கியில் நடராஜாவின் நர்த்தனம் வரும் இரண்டு பகுதிகளையும் வெட்டி நீக்கி விடத் தயவுசெய்து ஏற்பாடு செய்யுங்கள். "பத்தாயிரம் ரூபாய் கொடுத்தால்தான் அந்தப் பாகத்தை வெட்டுவேன்" என்று டாக்கி சொந்தக்காரர் சொல்லும் பட்சத்தில், அந்தப் புண்ணிய கைங்கரியத்துக்காகச் சந்தா வசூல் செய்யவும், முதல் முதலில் ஐந்து ரூபாய் நன்கொடையாக அளிக்கவும் நான் தயாராக இருக்கிறேன். (ஆ. வி. 21-7-'35)

நிஉ விமரிசனத்தைக் கவனிக்க வேண்டியது அவசியமாகிறது.

...ஸ்ரீ ராமானுஜரின் படத்துக்கு விமரிசனம் எழுதுவது மிகவும் சுலபமான காரியம். ஏனெனில் அதில் உள்ள சிறப்புக்களை நாலைந்து வரிகளில் எடுத்துக் காட்டிவிடலாம். அந்தச் சிறப்புகள் வருமாறு: 1. கதை புனிதமான சரித்திரம்; தேசத்தின் தற்கால நிலைக்குப் பல விதத்திலும் பொருத்தமானது. 2. ஸ்ரீ ராமானுஜரின் வாழ்க்கைத் தத்துவங்களும் உபதேசங்களும் நன்கு வெளியாகும் முறையில் கதைப் போக்கு, சம்பாஷணையும் அமைக்கப்பட்டிருக்கின்றன. 3. படத்தில் ஆபாசம் என்பது அணுவளவும் கிடையாது. 4. சிறை புகுந்த தேசபக்தர்கள் பலர் இப்படத்தில் நடிக்கிறார்கள்.

"மேற்சொன்னவை படத்தின் சிறந்த அம்சங்கள்; மற்றவை யெல்லாம் சுத்த மட்டம்" என்று கூறி விமரிசனத்தை எளிதில் முடித்துவிடலாம். ஆனாலும் படத்தில் சம்பந்தப்பட்டவர்களின் முக்கியத்துவத்தை முன்னிட்டு, அந்த மட்டமான அம்சங்களில் சிலவற்றைக் கவனிக்கலாம்.

1. இந்த டாக்கியில் நடித்துள்ளவர்களில் முக்கியமானவர்களுக்குச் சினிமாத் திரையில் தோன்றுவதற்கு வேண்டிய முகவெட்டுக் கிடையாது...

2. வேஷப் பொருத்தம் சரியாயில்லை...

3. காட்சி அமைப்புகள் வெகுசாதாரணம்.

4. சங்கீதம் சர்வ மட்டம்...

5. நடிப்புத் திறமையும் அப்படியே. இராமானுஜர் நெம்பர் 3 ஆக நடித்திருக்கும் ஸ்ரீ சங்கு சுப்பிரமணியமும் இன்னும் இரண்டொருவரும் மிகவும் பிரயாசை எடுத்து நடித்திருக்கிறார்கள். ஆனால் அவர்களுடைய நடிப்பில் ஒவ்வொரு கணமும் அந்தப் பிரயாசை வெளியாகிறது.... ஸ்ரீ பிச்சமூர்த்தியின் ஒரு நிமிஷ நேர நடிப்பில்தான் கொஞ்சம் இயற்கைத் தோற்றத்தைக் காண்கிறோம்...

6. இந்த டாக்கியின் மோசமான அம்சங்களில் மிகவும் மோசமானது ஒன்று இருக்கிறது. அது என்னவென்றால், ஸ்ரீ ராமானுஜர் நெம்பர் ஒன்று, நெம்பர் இரண்டு, நெம்பர் மூன்று என்பதாக மூன்று பேர் இராமானுஜர் வேஷத்தில் வருகிறதுதான்.

(ஆ. வி. 2-10-'38)

திரைப்படத்தைப் போலவே மக்களை வெகுவாகப் பாதிக்கக்கூடியதாயும், ஓரே கணத்தில் எங்கும் பரவி எட்டும் வேகத்திலும் அதைவிடச் சக்தி வாய்ந்ததுமான தொடர்புச் சாதனம், ரேடியோ. அந்த வானொலிச் சாதனமும், நாம் இங்கே கவனிக்கும் அதே காலத்தில்தான் தமிழ்நாட்டில் நிலையம் கொண்டு பெருகிற்று. அதிலும் வெகுவானதாய் இருந்த கல்கியின் ஈடுபாட்டைப் பின்னர் பார்ப்போம். அதற்கிடையே இப்போது, மற்றும் ஒரு புராணப் படத்துக்குக் "கர்நாடகம்" எழு

இந்தப் படம் வெளியானதற்குச் சில மாதங்களுக்குப் பிறகு, கல்கியின் "தியாகபூமி" திரைப்படமாய் வந்தது. தமிழ் நாட்டுப் பத்திரிகைகளில் பெரும்பாலானவற்றில், அதற்குப் பாதகமான விமரிசனங்கள் வெளியாயின. எவ்வளவு பாதகமானது என்பது பின்னர் தெரியவரும். அந்த விமரிசனங்களில் சம்பந்தப்பட்டவர்களில் சிலர், இராமானுஜர் படத்தில் சம்பந்தப்பட்டவர்கள் எனத் தெரிகிறது.

(தொடரும்)

# தீவுகள்



## 13

விஜயாவின் நலனில் அக்கறை கொண்டு தாம் பேசுகிறதாகக் கபூர் குறிப்பிட்டதும் ராகேஷுக்குச் சிரிப்பு வந்தது. காதல் என்பது இரண்டே உள்ளங்களின் விவகாரமாயிருக்கும்போது மூன்றுவது நபருக்கு அதில் பொறுப்போ சம்பந்தமோ எப்படி ஏற்பட முடியும்?

''நான் என்ன செய்ய வேண்டுமென் கிறீர்கள்? இந்தக் காதல் உணர்வு வாழ்க்கை முழுவதும் நீடிக்கும் என்று சத்தியம் செய்து தரவேண்டுமா? நாங்கள் ஒருவரை யொருவர் விரும்புகிறோம். நான் உங்களுக்கு எதற்காக வாக்குறுதி தரவேண்டுமென்று எனக்குப் புரியவில்லை. விஜயாவுக்காக நீங்கள் ஏன் பேச வேண்டும்?'' என்றான் ராகேஷ்.

''கணவன் மனைவிக்குள் ஆரம்ப காலத்திலேயே பொருளாதார ஏற்றத் தாழ்வுகளின் காரணமாக ஏற்படும் சமூகப் பிரக்ஞை மாறாமலே இருந்தால், அவர்களுடைய இல்லற வாழ்க்கை எப்படி அமையும் என்பது எனக்குத் தெரியாமல் வேறு யாருக்குத் தெரியும்? உங்களுக்குள் பொருளாதார வேறுபாடு மட்டுமல்ல, மொழியின் காரணமாக ஏற்படும் இன வேறுபாடு வேறு இருக்கிறது. அதனால்தான் சொன்னேன்'' என்றார் கபூர்.

கபூர் சாமர்த்தியமாகப் பேச முற்படவில்லை, மனம் விட்டுப் பேசுகிறாரென்று விஜயாவுக்குப் பட்டது. அவர் குரலில் படபடப்பின் சாயை தெரிந்தது. கையில்லாத நாற்காலியில் அசௌகரியமாய் உட்கார்ந்திருப்பதின் காரணமாக அவர் கொஞ்சம் சங்கடப்படுவது போல் தோன்றிற்று. கால் மீது காலை மாறி மாறிப் போட்டுக் கொண்டார்.

''தோசை சாப்பிடுகிறீர்களா?'' என்றாள் விஜயா.

''கொண்டு வா. ரொம்பப் பசிக்கிறது'' என்றார் கபூர். அவர் வீட்டிலிருந்து ஒன்றும் சாப்பிடாமல் வந்திருக்கிறார் என்று தெரிந்தது. மோகினி அனுப்பி அவர் வந்திருக்க மாட்டார் என்று தோன்றியது.

விஜயா இரண்டு தட்டுக்களில் தோசையும், இரண்டு கிண்ணங்களில் சாம்பாரும் கொண்டு வந்து ஒரு ஸ்டூலில் அவற்றை வைத்து, ஸ்டூலைக் கபூர் எதிரே நகர்த்திப் போட்டாள்.

ராகேஷ் அவர் எதிரே உட்கார்ந்தான்.

''உங்கள் கால உலகம் வேறு. இப்பொழுதுள்ள உலகம் வேறு. இல்லறம் என்பது ஒரே ஆண் – பெண்ணுக்கிடையே இருக்கும் ஒப்பந்தமாக ஆயுட்காலம் முழுவதும் நீடித்திருக்க வேண்டுமா என்ற பிரச்னை, வெவ்வேறு சமூகத் தரப் பிரக்ஞையின் காரணமாக மட்டும் உண்டாக வேண்டும் என்ற அவசியம் இல்லை. எல்லாம் தாற்காலிகந்தான் என்ற பொருளாதார ஏற்பாட்டுச் சூழ்நிலையில், – எல்லாம் ஆயுட்காலம் முழுவதும் நீடிக்க வேண்டுமென்று நினைத்தால், நாட்டில் பொருளாதார முன்னேற்றம் காண்பது எப்படி? – திருமணம் போன்ற விஷயங்கள் கூட ஏன் விதிவிலக்காக இருக்க வேண்டுமென்று கருதும் காலம் இது. ஆகவே எதிர்காலத்தில் நான் என்ன செய்வேன் என்பது பற்றி உங்களுக்கு என்னால் என்ன வாக்குறுதி அளிக்க முடியும்?'' என்றான் ராகேஷ்.

''தொழில் வளர்ச்சி அடைந்துள்ள நாடுகளின் பண்பாட்டு அடிப்படையில் ஆராய்ந்து தத்துவார்த்தங்களைப் பொதுமைப்படுத்திப் பேசுகின்றவர்களின் கருத்துக்களைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றி அரை வேக்காட்டு நிலையில் எதுவும் கூறாதே... நம் நாட்டில் கணவன்தான் மனைவிக்குப் பொருளாதாரப் பாதுகாப்பு. இந்த விஷயத்தில் எந்தப் பெண்ணும் 'ரிஸ்க்' எடுத்துக்கொள்ள விரும்ப மாட்டாள். அதுவும் விஜயா போன்ற மத்தியதரப் பெண்ணின் மன நிலையை என்னால் புரிந்து கொள்ள முடியும். அவள் தந்தை திடீரென்று இறந்ததினால் அவள் குடும்பத்துக்கு ஏற்பட்டுள்ள நிலையைப் பார்... நீ சொல்வதெல்லாம் ஆணும் பெண்ணும் பொருளாதாரப் பாதுகாப்புக்காக ஒருவரை

இந்திரா பார்த்தசாரதி

யொருவர் நம்பியிராத மேல் நாட்டுச் சமூகத்துக்குச் சரி....'' என்றார் கபூர்.

''நான் அப்படிச் செய்வேன் என்பதற்காகச் சொல்லவில்லை. ஆயுட் காலம் வரை இக்காதல் உணர்வு நீடிக்குமா என்ற உங்கள் கேள்விக்கு ஒரு பொதுக் கொள்கை ரீதியாகப் பதில் சொன்னேன். மேல்மட்டத்தில் இருக்கும் உங்களால் அம்மாவை விவாகரத்து செய்ய முடிந்ததா? பொதுக் கொள்கை மட்டுமல்ல, தனிப்பட்டவர்களின் மன அமைப்பும் இதற்குக் காரணம்... நான் இந்த விஷயத்தில் உங்களைப் போல்தான் இருப்பேன் என்று தோன்றுகிறது '' என்றான் ராகேஷ்.

'' விஜயா மோகினி மாதிரி இல்லாமல் இருந்தால் சரி'' என்றார் கபூர். எல்லோரும் சிரித்தார்கள்.

'' அம்மா உங்களிடம் என்ன சொன்னாள் ?'' என்று கேட்டான் ராகேஷ்.

'' எதைப் பற்றி ?''

'' நான் வீட்டைவிட்டு வந்துவிட்டேன் என்பதைப் பற்றி ....''

''அதைப் பற்றி நீ ஏன் கவலைப்படுகிறாய்? அம்மாவின் அபிப்பிராயம் உனக்கு இன்னும் முக்கியமாகப்படுகிறதா ?''

''என்னால் உங்களுக்கு ஏதாவது தொந்தரவு ஏற்பட்டதா என்பதற்காகக் கேட்டேன்.''

கபூர் பதில் சொல்லவில்லை. ஏதோ பெரிதாக நடந்திருக்க வேண்டும் என்று விஜயாவுக்குப் பட்டது. கபூரின் மௌனம் பொருள் பொதிந்ததாகத் தெரிந்தது.

''தோசை போதுமா ?'' என்று கேட்டாள் விஜயா, அவர் தட்டைச் சற்றுத் தள்ளி வைப்பதைப் பார்த்து.

''போதும்.... தாங்க்ஸ்.... மிகவும் நன்றாக இருக்கிறது. ஹோட்டலில் இவ்வளவு அருமையான சாம்பார் கிடைப்பதில்லை '' என்றார் கபூர்.

விஜயா தட்டுக்களை எடுத்துக் கொண்டு உள்ளே போனாள்.

'உன்னுடைய அம்மாவும் வீட்டை விட்டுப் போய்விட்டாள்' என்று கபூர் பஞ்சாபியில் சொன்னது அவள் காதுகளில் விழுந்தது.

'' எங்கே ?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான் ராகேஷ்.

''தெரியாது..... நான் நேற்றிரவு வீட்டுக்குப் போகவில்லை. இன்று காலை சென்றேன். மான்சிங் சொன்னான், நேற்று மாலை வீட்டை விட்டுப் போனவள் வரவில்லையென்று. சதீஷ் குடித்துவிட்டு நடு ராத்திரியில் வந்திருக்கிறான். அவனுக்கும் பாபிக்கும் நேற்றிரவு பெரிய சண்டையாம்... என் அதிர்ஷ்டம் யாருக்கும் வேண்டாம் என்று நினைக்கிறேன்!''

''நீங்கள் நேற்றிரவு எங்கே போயிருந்தீர்கள் ?''

கபூர் பதில் சொன்னாரா இல்லையா என்று விஜயாவின் காதில் விழவில்லை. பதில் சொல்லாமல் இருந்திருக்கலாம். அவர் எங்கே போயிருப்பார் ?

'' நீ வீட்டுக்கு வந்துவிடு. படிப்பை முடித்துவிட்டு என்ன வேண்டுமானாலும் செய்து கொள். நீ வீட்டில் இருந்தால்தான் எனக்கு ஆறுதலாக இருக்கும். விஜயாவுக்கு நான் ஆபீஸில் வேலை தருகிறேன்'' என்று சொல்லிக் கொண்டிருந்தார் கபூர்.

மோகினி எங்கே போயிருப்பாள்? வராமலேயே இருந்துவிடப் போகிறாளா ? அப்படியொரு நம்பிக்கை கபூருக்கு இருக்கிறதா ? அவளுக்குப் பல சிநேகிதர்கள் உண்டு. யார் வீட்டுக்காவது போயிருப்பாள். இரண்டு மூன்று நாட்கள் கழித்து வரலாம். நான் அவருடைய ஆபீசில் எப்படி வேலை செய்ய முடியும் ? ஆபீசுக்கு வந்து சண்டை போடமாட்டாள் என்பது என்ன நிச்சயம்? ராகேஷ் ஏன் பதில் சொல்லாமல் இருக்கிறான்? வீட்டுக்குத் திரும்பப் போவது பற்றி யோசிக்கிறானா ? கபூர் மனத்தில் என்ன திட்டம் வைத்திருக்கிறார் ?



விஜயாவை அவள் அம்மா கேட்டாள் : ''இவன் எதுக்கு வந்திருக்கான் ? கூட்டிண்டு போகவா ?''

'' என்னை அவர் ஆபீசில் வேலை செய்ய வரயான்னு கேட்கிறார்.....''

'' அவனோட சண்டை போட்டுண்டு அவன் ஆபீசிலே வேலை செய்ய முடியுமா ? அவ சும்மா இருப்பாளா ?''

''அதைப் பத்தி அவரே கவலைப்படலே, உனக்கு என்ன வந்தது?''

''கல்யாணம் பண்ணிவைக்கிறேங்கிறாரு?''

''கல்யாணம், கல்யாணம்..... அதைப் பத்தி அப்புறம் யோசிக்கலாமே...''

'' அப்புறம் என்னடி யோசிக்கிறது ? கல்யாணம் பண்ணிக்கச் சரின்னானா, அவன்கிட்ட வேலைக்கு எதுக்காகப் போகணும் ? ஆத்திலே மாட்டுப் பெண்ணா லட்சணமா இருக்க வேண்டியதுதானே ?''

''இப்போ 'பஞ்சாபி' அது இதுங்கிறத்தைப் பத்தியெல்லாம் கவலையில்லையா ?''

''அவனே பண்ணிண்டான்னா அப்புறம் அதைப் பத்தி என்ன கவலை?''

அம்மா இப்படிப் பேசுகிறாள் என்பதற்கு அவள் மீது குற்றம் சொல்ல முடியாது. கபூர் சொன்னது போல், மத்தியதர வர்க்கத்தினருக்குத் தேவையெல்லாம் பொருளாதாரப் பாதுகாப்புதான். பணம் உள்ளவர்களால் தான், இலட்சியம் அது இது என்று கனவு காண முடியும். அம்மாவின் முகம் பிரகாசமாகிவிட்டது. கபூரே வீட்டுக்கு வந்திருக்கிறார். தன் வீட்டுத் தோசையைச் சாப்பிடுகிறார். வேலைக்கு வா என்கிறார். கல்யாணம் செய்து வைக்கவும் தயாராக இருக்கலாம். பெண் பணக்கார வீட்டு நாட்டுப் பெண்ணாகி விட்டால், அவள் பணக்கார வீட்டுச் சம்பந்தியாகிவிடுவாள். பொருளாதாரப் பிரச்னை கிடையாது. உமாவுக்கும் திருமணப் பிரச்னை இல்லை. பானுவையும் காலேஜில் சேர்த்து விடலாம்.... இதுதான் எல்லாப் பிரச்னைகளும் தீர ஒரே வழி.....

அவள் இருவருக்கும் காப்பியை எடுத்துக் கொண்டு போனாள்.



கபூர் காப்பியை வாங்கிக் கொண்டே சொன்னார்: "நான் ஒரு யோசனை சொல்லுகிறேன், கேட்கிறாயா ?"

" என்ன ?"

" ராகேஷை நான் அழைத்துக் கொண்டு போகிறேன். அவன் படித்து முடியட்டும். அதுவரையில் நீ என் ஆபீசில் வேலை செய்கிறாயா ?"

"என்னால் அந்த வீட்டில் இருக்க முடியாது. ஹாஸ்டலில் இருக்கிறேன் " என்றான், ராகேஷ்.

" வீடு இருக்கும்போது எதற்காக ஹாஸ்டலில் இருக்க வேண்டும் ?"

"அம்மாவோடு தினம் என்னால் சண்டை போட முடியாது."

" அம்மாதான் போய் விட்டாளே ?"

"அவள் திரும்பி வரமாட்டாள் என்பது என்ன நிச்சயம் ?"

"அவள் விவாகரத்து கோரலாம் என்று எனக்குப் படுகிறது. அப்படித்தான் அவளுண்டிய சிநேகிதர்கள் யோசனை சொல்லக் கூடும்....."

"விவாகரத்தா ?" என்று வியப்புடன் கேட்டான் ராகேஷ்.

"..நான் அதைக் கண்டு பயப்படுவேன் என்று அவள் நினைப்பாள். என் வருமபடியில் பாதியைக் கேட்டாளானால், நான் அவளுக்கு அடிபணிந்துவிடுவேன் என்று அவள் எதிர்பார்க்கலாம். ஆனால் அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. விஜயாவையும் நான் நம் வீட்டுக்கு அழைத்துப் போகத் தயாராக இருக்கிறேன், அவளுக்கு ஆட்சேபனை இல்லாவிட்டால்.... ரூபி சந்தோஷப்படுவாள்."

" நானு, உங்கள் வீட்டுக்கா, அது எப்படி முடியும்....?"

"மோகினி திரும்ப வரமாட்டாள் என்று தான் எனக்குத் தோன்றுகிறது."

" மற்றவர்கள் என்னைப் பற்றி என்ன நினைப்பார்கள் ?"

" மற்றவர்கள் யாவருக்கும் அவர்களைப் பற்றித்தான் கவலை. நீ வருவது பற்றியும் வராமலிருப்பது பற்றியும் அவர்களுக்கு எந்த விதமான அபிப்பிராயமும்இருக்க முடியாது!"

"அம்மா எங்கே போயிருக்கிறாள் என்று நீங்கள் விசாரிக்கவில்லையா?"

"இல்லை."

" நான் உங்கள் ஆஃபீசில் வேலை செய்கிறேன். உங்கள் வீட்டுக்கு வருவது என்பது..." என்று அதற்கு மேல் சொல்லத் தயங்கினாள் விஜயா.

" திருமணம் செய்து வைத்தால்தான் வருவாயா ?" என்று சிரித்துக் கொண்டே கேட்டார் கபூர்.

" அப்படிச் சொல்லவில்லை. உங்கள் வீட்டில் உள்ள மற்றவர்கள் என்னை எப்படி ஏற்றுக் கொள்வார்கள் என்று எனக்குப் புரியவில்லை."

"ஸ்வர்ணாவுக்கும் சதீஷுக்கும் எந்தவித அபிப்பிராயமும் இருக்க முடியாது. அஷோக்கும் சசியும் அந்தஸ்து பாராட்டுகின்றவர்கள். அவர்களுக்குப் பிடிக்காமல் இருக்கலாம்.... அஞ்சலி சின்னப் பெண். ரூபி நிச்சயம் விரும்புவாள்" என்றார் கபூர்.

"மிஸஸ் கபூர் திரும்ப வரமாட்டாள் என்று நீங்கள் எப்படி நிச்சயமாக நம்புகிறீர்கள் ?"

கபூர் பதில் சொல்லவில்லை. அவர் எழுந்து ஜன்னல் வழியே வெளியே நோக்கினார். அவர் தாடை இறுகுவது போல் விஜயாவுக்குப் பட்டது. அவர் எதையும் குறிப்பிட்டுப்பார்ப்பதாக அவளுக்குத் தெரியவில்லை. அவர் ஏதோ யோசித்துக் கொண்டிருக்கிறார் போல் இருக்கிறது. மோகினி வந்துவிட்டால் என்ன செய்வது என்பது பற்றி இருக்கலாம். அவர் திடீரென்று திரும்பினார்.

" மோகினி முயற்சி செய்யாவிட்டாலும், அவளிடமிருந்து விடுதலை வேண்டும் என்று மனுச் செய்து கொள்ளப் போகிறேன்...இப்பொழுது வருகிறாயா, இல்லையா?" என்று கேட்டார் குரலில் வரவழைத்துக் கொண்ட ஒரு நிதானத்துடன்.

இதற்கு என்ன பதில் சொல்வதென்று விஜயாவுக்குப் புரியவில்லை. என்னால் அந்த வீட்டில் போயிருக்க முடியாது. அதுவும் ராகேஷ் என்னைத் திருமணம் செய்துகொள்ளப் போகிறார் என்று எல்லோருக்கும் தெரிந்து விட்டால், மோகினியை விரட்டி விட்டு நான் போயிருக்கிறேன் என்று எல்லோரும் சொல்வார்கள். விவாகரத்து கோரப் போவதாக இவர் கூறுகிறார்... என்னை மருமகளாக ஏற்பதற்காகத்தான் இத் திருமணத்தை எதிர்த்த மனைவியை அவர் விலக்கிவிட்டார் என்ற பேச்சு வேறு வேண்டுமா? — வரமாட்டேன் என்று எப்படிக் கண்டிப்பாகச் சொல்வது?

"விஜயா! அந்த வீட்டுக்கு இப்போது வர வேண்டாம்"என்றான் ராகேஷ். தன்மனத்தில் ஓடிய எண்ணங்களை இவன் புரிந்து கொண்டு விட்டானு என்று நினைத்தாள் விஜயா.

"நீ என்ன சொல்கிறாய்?" என்று கேட்டார் கபூர்.

## உலகளந்த பெருமாள் கோவில்

சிங்காநல்லூர் ஸ்ரீ உலகளந்த பெருமாள் சுமார் மூவாயிரம் வருடங்கள் பழமை வாய்ந்தவர். பல்லவர் காலத்தும் பஞ்ச லோகச் சிலையாகத் திகழ்பவர். ஸ்ரீ பூமி-நீளா சமேத ஸ்ரீ வரதராஜ ஸ்வாமியோ சோழர் காலத்து உருவர்.

இந்தப் பெருமான் கோவிலினுள்ளேயே ஸ்ரீ பிரஸன்ன மகா கணபதியும் குடிகொண்டிருக்கிறார். இக்கோவிலைப் புதுப்பித்துக் கும்பாபிஷேகம் செய்யும் திருப்பணி நடைபெற்று வருகிறது. நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி: எஸ். வரதராஜ ஐயங்கார், டிரஸ்டி, ஸ்ரீ உலகளந்த பெருமாள் கோவில், அக்ரஹாரம், சிங்காநல்லூர், கோயமுத்தூர் - 641005.



**JR!** ஜெயராதா இண்டஸ்ட்ரீஸ்

# அளிக்கும் கிரைண்டர் சேமிப்புதிட்டம்

இத்திட்டத்தின் படி முதல் மாத சந்தா செலுத்திய உடன் ஒரு இட்லி தட்டு பரிசாக வழங்கப்படும்.



பரிசு

பிரசித்தி பெற்ற ஜெயராதா மாவரைக்கும் இயந்திரங்கள் தயாரிப்பாளர்கள் வழங்கும் இத்திட்டத்தின் கீழ் நீங்களும் சேர்ந்து சுலபமாக ஒரு மாவரைக்கும் இயந்திரம் வாங்கலாம். ரூ 100/- வீதம் 20 மாதங்கள் செலுத்த வேண்டும். ஒவ்வொரு மாதம் 15ம் தேதியன்று குலுக்கல் நடைபெறும். குலுக்கலில் வெற்றி பெறும் சந்தாதாரருக்கு உடனடியாக ஜெயராதா டீலக்ஸ் மாடல் 1 லிட்டர் மாவரைக்கும் இயந்திரம் கிடைப்பதோடு பின் செலுத்த வேண்டிய சந்தா தொகையை செலுத்த வேண்டியதில்லை. மற்ற விபரங்களுக்கு எங்களுக்கு எழுதுங்கள்.



## ஜெயராதா இண்டஸ்ட்ரீஸ்

கணபதி நகர்-மாயூரம் 609002

ஏஜெண்டுகள்
ஸ்டாண்டர்டு மில் ஸ்டோர்ஸ்
94, அரண்மனைக்கார தெரு
சென்னை-1 போன் 29638

K. ராமகிருஷ்ணன்
4/112, ராம் நிவாஸ்
திலக்கிராஸ் ரோடு, மாதுங்கா
பம்பாய்-19 போன்-482782

---

## உடல்வலி

உடனடியாக குணமாகிறது!






# அமிர்தாஞ்சனம்

**தலைவலி, ஜலதோஷம் மற்றும் வலிகளுக்கு நம்பகமான நிவாரணி**

அமிர்தாஞ்சனம் உடல்வலி, தலைவலி, தசைவலி, சுளுக்கு, ஜலதோஷம் இவற்றிலிருந்து உடனடியாக குணமளிக்கிறது. அமிர்தாஞ்சனம் தடவியதும் வலி மறைகிறது. பாட்டில்கள், சிக்கனமான ஜாடிகள், மற்றும் மலிவு விலை டப்பாக்களிலும் கிடைக்கிறது.

அமிர்தாஞ்சனம் — பத்து மருந்து பொருள்கள் ஒருங்கே சேர்ந்தது.

அமிர்தாஞ்சன் லிமிடெட்

''மன்னிக்கவும்... நான் வருவதற்கில்லை.''

''சரி... உன் இஷ்டம்...'' என்று கூறிக் கொண்டே எழுந்தார் கபூர். ராகேஷும் எழுந்திருந்தான்.

விஜயா அவன் பெட்டியைக் கொண்டு வந்து அவன் எதிரே வைத்தாள்.

''நீ இன்று முதற்கொண்டே வேலைக்கு வரலாம்'' என்றார் கபூர்.

''மனி போய்விட்டாரா?''

''இல்லை... இன்னும் இரண்டு மூன்று நாட்களில் போவான். நீ என்ன வேலை செய்ய வேண்டும் என்று அவனிடம் கற்றுக்கொள்ள வேண்டாமா?''

விஜயா புன்னகையுடன் சொன்னாள்: ''சரி, வருகிறேன்.''

''நீயும் எங்கள் கூட வருவதாயிருந்தால் காத்திருக்கிறேன்'' என்றான் ராகேஷ்.

''இல்லை... நீங்கள் போங்கள். இன்னும் ஒரு மணி நேரத்தில் நான் நேரே ஆபீசுக்கு வருகிறேன்'' என்றாள் விஜயா.

காரில் உட்கார்ந்ததும் கபூர் கேட்டார்: ''இவளுடன் வாழ்க்கை முழுவதும் சந்தோஷமாக இருக்க முடியும் என்று நீ நம்புகிறாயா?''

''ஏன் திரும்பத் திரும்ப இப்படிக் கேட்கிறீர்கள்?''

''இவளிடம் குறை இருப்பதாக நான் சொல்லவில்லை. உன்னால் முடியுமா என்று தான் கேட்கிறேன். மேலும் என்னால் உன் அம்மாவை விவாகரத்து செய்ய முடிந்ததா என்று கேட்டாய். அவ்வாறு செய்ய நான் இப்பொழுது முடிவு செய்து விட்டேன். நீயும் என்னைப் போல்தான் என்று நீ சொன்னதால் கேட்கிறேன். உனக்கும் எனக்கு ஏற்பட்டது போல் ஒரு சூழ்நிலை உருவானால்...''

''நிச்சயமாக உருவாகாது. நீங்கள், சமூகக் கணிப்பில் இவ்வளவு பெரிய பொருளாதார மேதையாக இருந்தாலும் இல்லற வாழ்க்கையில் இப்படித் தாழ்வு மனப்பான்மையினால் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பதுபோல் நான் கஷ்டப்பட வேண்டிய அவசியமில்லை. விஜயாவுக்கு நீங்கள் சொல்வதுபோல் ஒரு பிரச்னை இருந்து கொண்டே இருக்குமென்றாலும் இதற்குத் தகுந்தாற்போல் அனுசரித்துப் போகக் கூடிய மனப் பக்குவம் எனக்கு உண்டு. இன்னொரு விஷயம்: நீங்கள் 'வாழ்க்கை முழுதும்' 'வாழ்க்கை முழுதும்' என்று அடிக்கடி கேட்பது வேடிக்கையாக இருக்கிறது. விஞ்ஞான யுகத்தில்...'' என்று அவன் தொடர்வதற்குள் கபூர் குறுக்கிட்டார்: ''ஒளி வருஷங்களைப் பற்றிப் பேசும் இக்காலத்தில் மனித வாழ்க்கையின் தாற்காலிகத் தன்மையைப் பற்றித்தானே சொல்லப் போகிறாய்? — நேற்றே இதைப் பற்றி நானும் டாக்டர் சாட்டர்ஜியும் பேசிக் கொண்டிருந்தோம்: தனி மனிதனைப் பொறுத்த வரையில் அவன் வாழப் போகிற வாழ்க்கை மிகவும் முக்கியமானது. ஒவ்வொரு கணமும் அவனுக்கு ஓர் ஒளி வருஷம். எழுபது வருஷங்கள் இருக்கப் போகிறான் என்றால் இந்த எழுபது வருஷங்களையும் கணங்களாகக் கணக்கிட்டுப் பார்த்துக்கொள். அத்தனை ஒளி வருஷங்கள். ஒவ்வொரு கணத்தையும் ஒரு புது வாழ்க்கையாக அவன் காண வேண்டும். நேர் கோடு என்பதும் புள்ளிகளின் சேர்க்கைதானே? இந்த மனப்பான்மை ஏற்பட்டு விட்டால், எதுவும் தாற்காலிகமானது என்ற எண்ணமே எழாது.''

''ஒவ்வொரு கணத்தையும் ஒரு புது வாழ்க்கையாகக் காண வேண்டும் என்றால், புதுப் புது அநுபவத்தை நாடிச் செல்ல வேண்டும் என்கிறீர்களா? அப்படியென்றால் விஜயாவும் நானும் வாழ்க்கை முழுவதும் சந்தோஷமாக இருப்போமா என்ற உங்கள் கேள்வி அர்த்தமற்றது'' என்றான் ராகேஷ்.

''கணவனும் மனைவியும் ஒருவருக்கொருவர் ஏன் ஒவ்வொரு கணத்திலும் புதியவர்களாக இருக்கக்கூடாது? இது அவரவர்களுடைய ஈடுபாடுகளின் எல்லையைப் பொறுத்த விஷயம்'' என்றார் கபூர். (தொடரும்)



சென்னையிலுள்ள நிறுவனங்களிடையே வருஷா வருஷம் கிரிக்கெட் போட்டி நடத்தி வெற்றி பெறுவர்களுக்கு சுந்தம் ஸ்தாபனம் கோப்பைகள் வழங்கிக் கௌரவிக்கிறது. இந்த வருஷ சாம்பியன்களான இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கின் காப்டன் ஆர். ரமேஷ், எ. ஐ. டி. பாரி கம்பெனி சேர்மன் ஆர். வேங்கடசாமி நாயுடுவிடமிருந்து 'சுந்தம் கோப்பை'யைப் பெறுகிறார்.

சென்னை மேல மாம்பலம் ஸ்ரீ பக்த சமாஜ், ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகளின் சதாபிஷேக வைபவத்தை அற்புதமான மாத விழாவாகக் கொண்டாடுகிறது. ஜூன் இரண்டாம் தேதியன்று ஸ்வராஜ்யா ஆசிரியர் ஸ்ரீ ஆர். வேங்கடராமனின் தலைமையில் ஒரு மலர் வெளியிட்டது. 'சௌந்தர்ய லஹரி', 'அபிராமி அநுபூதி' ஆகியவற்றுக்கு எளிய தமிழ் மொழிபெயர்ப்பு இம்மலரின் சிறப்புக்களில் ஒன்றாகும்.





**நா**தன் அலுவலகம் புறப்பட்டுக் கொண்டிருந்தான். ராஜி தயங்கித் தயங்கி நின்றாள்.

''ஏன் இப்படி மென்று விழுங்குகிறாய்? எனக்கு நேரமாகிறது. விஷயத்துக்கு வா!'' என்று விரட்டினான் நாதன்.

''ஒன்றுமில்லை... கையில் பணம் தீர்ந்து விட்டது. வரும்போது பாங்கியிலிருந்து ஒரு நூறு ரூபாயாவது...'' என இழுத்தாள் ராஜி.

நாதனுக்குப் பற்றிக் கொண்டு வந்தது. ''என்ன விளையாடுகிறாய்? பணம் தீர்ந்து விட்டதா? தேதி ஏழுதான் ஆகிறது. அதற்குள் அறுநூறு ரூபாயைக் கோட்டை விட்டு விட்டால்? நான் குடித்தனம் நடத்தி வாழ்ந்தாற்போல் தான்!'' என இரைந்தான் அவன்.

அவனைச் சொல்லிக் குற்றமில்லை. மாதம் ஆயிரம் ரூபாய் வருகிறது. கணவன், மனைவி இரண்டே பேர்தான். ஊருக்கு மாதம் நூறு ரூபாய் அனுப்ப வேண்டும். சொஸைட்டியில் கட்டிக் கொடுத்த வீட்டுக்கு மாதா மாதம்

# ஆட்டின்வால்

வி. சரோஜா

இருநூறு ரூபாய் பிடித்துக் கொள்கிறார்கள். மீதமுள்ள எழுநூற்றில் தன் செலவுக்கு இருத்திக் கொண்டு பாக்கியை அப்படியே ராஜியிடம் கொடுத்து விடுவான். ராஜியின் கை ஓட்டை. எந்த மாதமும் அவள் அறுநூறுக்குள் சமாளித்ததில்லை. போதாத குறைக்கு நாதனின் பர்ஸிலிருந்து அவசரத்துக்கு ஒன்றிரண்டு என்று பல தடவை எடுத்துக்கொள்வாள். ஒவ்வொரு மாதமும் சேமிப்பிலிருந்து கொஞ்சம் எடுக்கத்தான் வேண்டியிருந்தது.



''ஏன் இரைகிறீர்கள்? நான் என்ன உங்கள் பணத்தை யெல்லாம் கடித்துத் தின்று விட்டேனா?''

''கணக்குப் பார்த்துச் செலவழித்தால், அது புத்திசாலித்தனம். செலவழித்த பணத்துக்குக் கணக்கெழுதி என்ன லாபம்? வெறும் கூட்டலும் கழித்தலும்...''

''அறுநூறு அறுநூறாகவே இருக்குமா?- டேப் ரிகார்டர் வாங்கினோமே... அதற்கு முன்பணமாக நூற்றைம்பது ரூபாய்...''

''வாங்கினோமே, என்ன வாங்கினோமே... நான் வாங்கினேன் என்று என்னிடம் காட்டினாய்... இப்போது டேப் ரிகார்டர் எதற்கு? நம் சண்டையை ரிகார்டு பண்ணி ஆனந்தமாகக் கேட்டு ரசிக்கவா?''

''நீங்கள் ஒன்றும் அலுத்துக் கொள்ள வேண்டாம். திருப்பிக் கொடுத்தால் பாதிப் பணம் எழுபத்தைந்து ரூபாயை எண்ணி வைத்து விடுவான்'' என்றாள் ராஜி கோபமாக.

''வேண்டாம்...வேண்டாம்...அது வேறு நஷ்டம்'' என்றான் நாதன் எரிச்சலுடன்.

**ரா**ஜி பணக்கார வீட்டுப் பெண். வசதியாக வாழ்ந்தவள். எதைப் பார்த்து விரும்பினாலும் உடனே வாங்க வேண்டும் என்று நினைப்பவள். நாதனின் வருமானத்துக்குள் செலவைச் சுருக்க வேண்டும் என்று ஆசை இருந்தது. ஆனால் ஏதாவது ஒன்று குறுக்கிட்டு அவனிடம் வசைமாரி வாங்க வழி வகுத்துக் கொண்டே யிருந்தது.

மாதா மாதம் இருநூறு ரூபாய்க்கும் குறைவாகத்தான்



**ஆறுதல் கூறிய ஆசிரியை !**

கிருஷ்ணகிரியில் உள்ள ஆர். சி. பள்ளியில் வேடிக்கையான ஆனால் பாராட்டப்பட வேண்டிய நிகழ்ச்சி ஒன்று அண்மையில் நடந்தது. ஐந்தாவது வகுப்பில் ஐந்து பிள்ளைகள் பரீட்சையில் தவறி விட்டனர். சம்பந்தப்பட்ட வகுப்பு ஆசிரியை தமது சொந்தச் செலவில் பரீட்சையில் தவறிய அந்த ஐந்து பிள்ளைகளுக்கும் ஓர் ஆறுதலாக இனிப்பு, காரம் ஆகியவைகளை வழங்கினார். மனம் தளராமல் தொடர்ந்து படித்திட அறிவுரை வழங்கினார்.

நகவல்: வி. எஸ். ராஜகோபால்

---

துண்டு விழுகிறது. அவன் அப்பா ரிடையராகிப் பணத்தை வட்டிக்கும், வட்டியை வட்டிக்கும் கொடுத்துச் சம்பாதித்துக் கொண்டிருந்தார். இருநூறு ரூபாய் என்ன? முந்நூறு கேட்டாலும் அனுப்பத் தயங்க மாட்டார். மாப்பிள்ளைக்குத் தெரியக் கூடாது என்று சொன்னாலும் ஒப்புக்கொள்வார். ஆனால் அப்படிச் செய்ய அவள் நடுங்கினாள். நாதனுக்கு இது தெரிய வந்தால் பிரளயம்தான்.

திருமணமான புதிதில் அவள் அப்பா அவளைப் பார்க்க வந்திருந்தார். கடைத் தெருப் பக்கம் போனபோது பெண்ணை என்ன வேண்டும் என்று சாதாரணமாக விசாரித்திருக்கிறார். ராஜியும் நெஞ்சில் விகல்பம் ஏதும் இல்லாமல், சோப்பு, பவுடர், ஜாக்கெட் பீஸ் என்று பலவித சாமான்களை வாங்கிக் கொண்டதுடன் நில்லாமல், நாதனிடம் தனிமையில் பெருமையாக எடுத்தும் காண்பித்தாள்.

நாதன் அவற்றை ஒரு கண்ணோட்டம் விட்டான். பின்னர் ராஜியின் பக்கம் திரும்பினான். ''என் வீட்டுக்காரருக்கு இதெல்லாம் வாங்கித் தர மனமும் இல்லை, வசதியும் போதாது என்று ஒரு குரல் அழுதாயாக்கும். பெண்ணின் கண்கள் கலங்குவதைப் பார்க்கப் பொறுக்காமல், உன் அப்பா அள்ளி அள்ளி வீசினாராக்கும்?'' எனச் சீறினான் நாதன்.

''ஏன் இப்படி எல்லாவற்றுக்கும் ஒரு தப்பர்த்தம் கற்பித்துக் கொள்கிறீர்கள்? நான் ஊரில் இருந்தால் அப்பா வாங்கித் தர மாட்டாரா?'' எனக் கேட்டாள் ராஜி.

''அப்படியா? அம்மாவுக்கு இந்த இடம் கசந்து விட்டதா? ஊருக்குப் போக வேண்டும் என்ற ஆசை வந்து விட்டதா?... எப்போது பயணம்?'' என்று கேட்டான் நாதன் குத்தலாக.

ராஜியின் விழிகளில் நீர் மல்கியது. ''வாங்கியது தப்புத்தான். இப்போது என்னதான் செய்யச் சொல்கிறீர்கள்?'' என்று கேட்டாள்.

''இதற்கான மொத்தப் பணத்தையும் உன் அப்பாவுக்குப் பைசாக் குறையாமல் எண்ணிக் கொடுத்துவிடு. நான் உன் அப்பாவுக்கு மாப்பிள்ளையே தவிர அவர் கையை எதிர்பார்க்கும் பிச்சைக்காரன் இல்லை.... புரிகிறதா?'' என்று கேட்டான் நாதன்.

''அப்படிக் கொடுத்து விட்டால், அப்புறம் மாதச் செலவுக்கு?''

''கஷ்டப்படு.... சிரமப்படு... அப்போது தான் இதெல்லாம் வாங்கியது அவசியமா, இல்லையா என்பது உனக்குத் தெரிய வரும்'' என எழுந்து போனான்.

மாதா மாதம் அவள் அப்பா அனுப்பி அவள் சமாளித்து வந்தாள் என்று தெரிந்தால் அவளை மறு நிமிஷம் ஊருக்கு ரயிலேற்றி அனுப்பி விடுவான்.

அவள் சிந்தனைகளைத் தபால்காரனின் அழைப்புக் கலைத்தது.

வழக்கமாக வரும் பத்திரிகைகள், கடிதங்களோடு ஓர் அரசுடைமை வங்கியிலிருந்தும் கடிதம் வந்திருந்தது. அவள் சொந்த ஊருக்குப் போய், அங்கிருந்து திருப்பப்பட்டு அது வந்திருந்தது.

அந்த உறையை அவசரம் அவசரமாகப் பிரித்தாள். அவள் திருமணத்துக்கு ஒரு மாதம் முன்பு அந்த வங்கி நடத்திய ஒரு தேர்வில் அவள் கலந்து கொண்டிருந்தாள். அப்போது வேலை கிடைக்கும் என்ற நம்பிக்கை இல்லை. இப்போது சென்னைக் கிளைக்கே கூப்பிட்டிருந்தார்கள். ஆரம்பச் சம்பளமே ஐந்நூறு ரூபாய்.

ராஜி எழுந்து விட்டாள். உற்சாகம் அவள் மனத்தில் அலைமோதியது. ஆண்டவன் கூரையைப் பிய்த்துக் கொண்டு கொட்ட ஆரம்பித்து விட்டான். அவளும் வேலைக்குப் போக ஆரம்பித்து விட்டால்? இந்தச் சிக்கலைப் பல்லவியைக் கொஞ்ச நாட்களுக்கு நாதன் எடுக்க மாட்டான்.

**நா**தன் வந்தான். அவன் காலணிகளைக் கழற்றுமுன் வங்கியிலிருந்து வந்த கடிதத்தை அவனிடம் நீட்டினாள்.

''இந்த ஊர்ப் பிராஞ்சில்தான் போட்டிருக்கிறார்கள். எனக்கு வேலைக்குப் போக வேண்டும் என்ற ஆசையில்லைதான். இருந்தாலும் வலிய வந்ததை வேண்டாம் என்பானேன்? நீங்கள் ஆபீஸ் போன பிறகு எனக்கும் இங்கே தனியாகக் கொட்டுக் கொட்டு என்று உட்கார்ந்திருப்பது சிரமமாகத்தான் இருக்கிறது. இனிமேலாவது கொஞ்சம் தாராளமாகக் கையை நீட்டலாம். உழக்குக்குள் கிழக்கும் மேற்கும் பார்க்காமல் இருக்கலாம்.''

நாதன் மௌனமாகத் தன் பையிலிருந்து ஓர் உறையை எடுத்து அவளிடம் நீட்டினான். கற்றை கற்றையாக ரூபாய் நோட்டுக்களைத் தன்னுள் அடக்கிய அந்த உறையைப் பிரித்த ராஜி ''என்ன, போனஸா?'' என்று கேட்டாள் கண்கள் மலர.

''போனஸா? அப்படி யிருந்தால்தான் தேவலையே? தனியார் கம்பெனி இல்லையா? நோட்டீசுக்குப் பதிலாக மூன்று மாதச் சம்பளம் கொடுத்துக் கம்பெனியை இழுத்து மூடிவிட்டார்கள். இன்னொர் இடத்தில் உட்கார்வதற்கு எத்தனை நாட்கள் ஆகுமோ?... எப்படிக் காலம் தள்ளப் போகிறோம் என்று குழம்பிக் கொண்டு வந்தேன். நல்லவேளை நீ நல்ல சமாசாரம் வைத்திருக்கிறாய்!'' என்று கூறினான் நாதன்.

நிராசையால் ராஜிக்குத் துக்கம் பொங்கிக்கொண்டு வந்தது. தன் முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

ஆட்டுக்கு வாலை அந்த ஆண்டவன் அளந்துதான் வைத்திருந்தான்!

# ராஜஹம்சம்

மூன்று சிறுகதைகள் இம்மலையாளப் படத்தில். பிரயாணிகள் பங்களாவில் வந்து தங்கிய ஒரு பணக்கார வாலிபனை (உம்மர்) நம்பித் தன் கற்பை இழந்த அபலையின் (ஸ்ரீவித்யா) கண்ணீர்க் கதை முதல் கதை.

அடுத்தது அவள் தங்கையின் கதை: கயவனை நம்பி மோசம்போன காரிகை இறக்கும் முன் தன் தங்கையிடம், எந்தப் பணக்கார வாலிபனிடமும் மனத்தைப் பறி கொடுத்து விடக் கூடாது என்று கூறி உறுதிமொழியும் வாங்கிக் கொள்கிறாள். தங்கையின் (ஜெய பாரதி) மன உறுதியைத் தளர்த்த ஒரு பணக்கார வாலிபன் (பிரேம் நஸீர்) வந்து சேருகிறான். வாலிபனின் காதலை ஏற்பதா, வாக்குறுதியை மதிப்பதா?

இந்த வாலிபனின் முறிந்த காதல் மூன்றாவது கதை. ஏற்கனவே ஓர் ஏழைப் பெண்ணைக் காதலித்துத் தன் குடும்ப அந்தஸ்து காரணமாகத் தந்தையின் வெறுப்புக்கு ஆளாகி அவளை மறக்க நேரிடுகிறது; அவள் இறந்தும் விடுகிறாள். அப்புறம் வாலிபனின் பெற்றோர்களின் மனம் மாறி விடுகிறது! இதைப் பிரேம்நஸீர் எடுத்துச் சொல்லியும் ஜெயபாரதி அதை இலேசில் ஏற்கவில்லை.

ஸ்ரீ வித்யா, பிரேம்நஸீர், ஜெய பாரதி மூவர் நடிப்பும் பிரமாதம். சிறிதும் குழப்பம் இல்லாமல் படமாக்கியிருக்கிறார் டைரக்டர் ஹரிஹரன். ஆயினும் நல்ல கதையம்சம் கொண்ட இந்தப் படத்தில் விறுவிறுப்பு இல்லை. பார்ப்பவர்களின் சுறுசுறுப்பும் குறைந்துவிடுமே!

இது அற்புதமான ஈஸ்ட்மென் கலர்ப் படம். கேரளத்துக்கே உரிய எழில் பொங்கும் இயற்கைக் காட்சிகளை ஒளிப் பதிவுக் கலைஞர் ராஜகோபால் திறமையாகப் படமாக்கியிருக்கிறார். தேவராஜன் அமைத்திருக்கும் இசையும் இனிமையாக இருக்கிறது. அளவான வசனம் அருமையாக இருக்கிறது. இவ்வளவும் செய்தவர்கள் பிரேம் நஸீரும் ஜெயபாரதியும் ஒன்று சேரும் கடைசிக் காட்சியில் ஜெயபாரதியை மலை உச்சியில் உருட்டிவிட்டுப் படுகாயமுறச் செய்து ஒரு பாட்டையும் சேர்த்து, படத்தை நீட்டோ நீட்டென்று நீட்டி... என்ன போங்கள் இப்படியா பொறுமையைச் சோதிப்பது?





# அழகிய ஒடிஸி ஆடிய மைதிலி..

ஒடிஸ்ஸி நடனம் பயின்று, பம்பாய், போபால், சென்னை போன்ற பல நகரங்களில் பல நடன நிகழ்ச்சிகளை நடத்திப் புகழுடன் விளங்குகிறார் குமாரி மைதிலி ராமகிருஷ்ணன். ஆனால் அந்தப் புகழுக்கு அஸ்திவாரம் பரதக்கலைதான்! கலாக்ஷேத்திரா டி. ஆர். தேவநாதனிடம் பரதத்தில் ஆரம்பப் பயிற்சி பெற்றபிறகு ஸ்ரீமதி இந்திரா ராஜனிடம் பரதத்தைப் பூர்த்தி செய்தார். அப்புறம்தான் குரு ஸ்ரீநாத் ரவுத் 'ஒடிஸ்ஸி' நடனம் பயிற்றுவித்தார்.

அண்மையில், குமாரி மைதிலி ராமகிருஷ்ணனின் 'ஒடிஸ்ஸி' நடன நிகழ்ச்சி சென்னை ராம ராவ் கலாமண்டபத்தில் நடந்தது. 'ஸ்தாயி' என்ற ஆரம்ப நிகழ்ச்சியில் 'ஒடிஸ்ஸி' நடனத்துக்கே உரிய சிற்ப வடிவமான எழில்மிகு தோற்றங்களை, எத்தனை எத்தனையோ விதங்களில் மேடையில் கண்ட போது, ''அழகென்னும் தெய்வம்தான் அது வென்றே அறிந்தேன்'' என்ற பாரதியின் வரிகள் நினைவுக்கு வந்தன. அழகுணர்ச்சியைத் தெய்வீகத்துடன் குழைத்துக் கொடுப்பதில் ஒடிஸ்ஸி நடனத்துக்கு இணை வேறு கிடையாது.

ஜயதேவரின் அஷ்டபதியில், ராதையின் விரகதாபத்தைத் தோழி கண்ணனிடம் விவரிக்கிறாள். மைதிலியின் எழில்மிகு தோற்றம் கருத்துப் பொதிந்த மெய்ப்பாடுகளை அற்புதமாக வெளிப்படுத்தியது. தசாவதாரப் பெருமை நிகழ்ச்சியின் சிகரமாய் அமைந்தது. இடையிடையே மைதிலி தந்த ஆங்கில விளக்கம் மிகவும் உதவியாயிருந்தது.

குரு ஸ்ரீநாத் ரவுத் தாள வாத்தியத்தை இசைத்துக் கொண்டே நட்டுவாங்கம் செய்தது சிறப்பாயிருந்தது. ஸ்ரீ பங்கிம் சேத்தியின் வாய்ப்பாட்டு அற்புதம் என்றால், ஸ்ரீ பி.வி. ராதாகிருஷ்ணனின் புல்லாங்குழல் பெரு நேர்த்தி.

— காந்தன்

# கண்ணதாசன்



கடைசிப் பக்கம்

## அவனிடம் பேசுகிறேன்

இறைவா,
மீண்டும் உன்னை
நான் தேடுகிறேன்.
மரங்கள், செடிகொடிகள்,
மாட்டு மந்தைகள், மற்ற விலங்குகள், பறவைகள், பிற உயிரினங்கள் பலவற்றையும் நீயே படைத்திருக்கிறாய்.

ஆனால் அவற்றுக்கு எந்தக் கடமையையும் பொறுப்பையும் நீ விதிக்கவில்லை.

சுயேச்சையாகத் திரியும் அவற்றைப் பார்க்கும்போது எனக்குப் பொறாமையாகவே இருக்கிறது.

மனிதனுக்கு மட்டும் ஏன் நீ கடமைகளையும், பொறுப்புக்களையும் கொடுத்தாய்?

நாங்களோ சிக்கல்களைப் பிரிக்க முயன்று, அதிலேயே புதிய சிக்கல்களை உண்டாக்கிக் கொண்டிருக்கிறோம்.

இறைவா,

இரவு என்று ஒன்றையும், உறக்கம் என்று ஒன்றையும் மட்டும் நீ படைக்காமல் இருந்திருந்தால் மனிதர்கள் இருபது வயதுக்கு மேல் வாழ மாட்டார்கள்.

சலனம், சபலம் என்னும் கொடிய அலைகளால் சித்திரவதைப்படும் சராசரி மானிட ஜாதிக்கு நீ காட்ட வேண்டிய கருணை ஒன்றே.

இதயம் என்ற ஒன்றை நீ படைத்தாயே, அதை நீ மறுபரிசீலனை செய்ய வேண்டும்.

அதில் எழும் சில அலைகளை எடுத்துவிட்டுப் புதிய விதத்தில் அதை நீ உருவாக்கவேண்டும்.

மனிதன் உன்னை அடிக்கடி நினைக்க வேண்டும் என்பதற்காகவே இந்தச் சிக்கலை நீ உண்டாக்கியிருக்கிறாய்.

நான் அதை நன்றாக உணர்ந்திருக்கிறேன்.

சிக்கல்களை ஏற்றுக் கொண்டு, சகித்துக் கொண்டு மெது மெதுவாக இழை பிரித்து எடுப்பதை நான் ஒரு தவமாக மேற்கொண்டிருக்கிறேன்.

உன்னை அடிக்கடி நினைக்கின்றவன், நான்; ஏனென்றால், உன்னால் அடிக்கடி சோதிக்கப் படுகிறவன் நான்.

என் பிறந்த நாளன்று உன் சந்நிதியில் நான் நின்றேன்.

எப்போதும் போல் அன்றும் என் முழங்காலில் கடுமையான வலி இருந்தது. ஆனால் நிற்க நிற்க அது மறையத் தொடங்கிற்று.

ஏதோ ஒரு தெம்பு எனக்குள் எழுந்தது.

அர்ச்சகர் என் கழுத்தில் மாலை போட்டார்; அப்போது மயில் அகவிற்று.

கொஞ்ச நேரம் கழித்துப் பிரசாதம் கொடுத்தார்; அப்போதும் மயில் அகவிற்று.

'கடவுளே,
இந்த வலி மட்டும் இல்லாமலிருந்தால் எவ்வளவோ எழுதலாமே' என்று எண்ணினேன்; உன் கோவில் மணி ஓங்கி ஒலித்தது.

அன்று மாலை, ஆறு மணிக்கு நான் எழுந்த போது வானம் கருகருப்பாக இருந்தது. துள்ளி விளையாடலாம் போல் உடல் தெம்போடு இருந்தது. எழுதிக் கொண்டேயிருந்தேன்; எங்கிருந்தோ ஓர் ஊற்று வந்து கொண்டே இருந்தது.

உன் சந்நிதியில் ஒரு மணி நேரம் நின்றதற்குப் பலன், நீ எனக்கு வழங்கிய ஆரோக்கியமான நான்கு மணி நேரங்கள்.

'இறைவன், ஒன்றுக்கு நாலாகத் தருவான்' என்று, என் தாயார் அடிக்கடி சொல்வார்கள்.

ஊரெங்கும் கோயில்கள் கட்டியவர்கள் முட்டாள்களல்ல.

கோயிலில் நீ கல்லாக இல்லை; கனியாய், கருணையாய், காட்டாற்று வெள்ளமாய், பனியாய், பழமாய், பசுந்தேனாய் உன் அன்பு வெள்ளம் அங்கே பெருகி ஓடுகிறது.

உடைக்கின்ற தேங்காய்க்குள்ளிருந்து தண்ணீர் வரும்போது, உள்ளத்திலிருந்து கண்ணீர் வருகிறது.

எனக்கும் வந்தது.

உன்னையும், என்னையும் பிரித்தெடுக்க முடியாதபடி ஒரு பந்தம் தென்பட்டது; சிக்கல்கள் மறக்கடிக்கப்பட்டன; சித்திரவதை குறைவது தெரிந்தது.

கருணைக் கடலே,

பூமியில் நீ விளையாடும் விளையாட்டுகளைத் தெரிந்து கொண்டு விட்டேன்.

அழ வேண்டிய சூழ்நிலை வந்தால் சிரிப்பதற்குப் பழகுகிறேன்.

உடல், உள்ளம் இரண்டின் ஆரோக்கியத்தையும் உன்னிடம் ஒப்படைக்கிறேன்.

மாட்டுக்கு வலி வந்தால் மனிதனிடம் சொல்வதில்லை; மனிதனுக்கு வலி வந்தால் உன்னைத் தவிர, வேறு யாரிடம் சொல்ல முடியும்?

நீ நடத்து உன் நாடகத்தை; அதில் நானும் பங்கேற்றுக் கொள்கிறேன். ஆனால் ஒன்று, அதில் 'நல்ல நடிகன்' என்ற பெயரை நான்தான் பெறுவேன். அது உனக்குக் கிடைக்காது!

வண்டி இன்ன ஊருக்குத்தான் செல்கிறது என்று மாட்டுக்கே தெரிந்துவிடும் போது வண்டிக்காரனுக்கு வேலையென்ன?

என்னை எங்கே கொண்டு போகப் போகிறாய், எப்படி நடத்தப் போகிறாய் என்பதெல்லாம் எனக்கு முன்பே தெரிந்து விட்டன.

இனி உன் வித்தை என்னிடம் பலிக்காது!

நான் உன்னைப் பார்க்க வரும்போது — உன் சந்நிதியில் ஆனந்தமாய் மறந்து நிற்கும் போது மயில் அகவும், மணி ஒலிக்கும்; அடுத்தது என்ன என்பது எனக்குப் புரிந்துவிடும்.

இறைவா,

எந்த மனிதனிடம் துயரத்தைச் சொன்னாலும், அவன் கேலி செய்வான்.

நீ அவற்றைப் பொறுமையாகக் கேட்க வேண்டும் என்றுதான் உன்னைக் கல்லாகப் படைத்திருக்கிறார்கள்; அவர்களுக்கு என் நன்றி.

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# புது மணமகளுக்கு பொலிவு தரும் வண்ணத்துப் பூச்சி!

## பட்டு ரகங்களுக்கு

# 20%

## சிறப்புத் தள்ளுபடி ஜூலை 15-'75 வரையில் வழங்கப்படும்.

(திருமண கால விசேட சிறப்புத் தள்ளுபடி)

15-7-'75 வரை
பருத்தி வகைகளுக்கு
10% விகிதமும்
மொத்த வியாபாரிகளுக்கு
15% சதவிகித
கமிஷனும் வழங்கப்படும்:

**கோ-ஆப்டெக்ஸ்**




எர்ணாகுளத்தில் 'மேகலா', பெங்களூர்
கவல்ரி ரோட், விஜயவாடா கவர்னர்பெட்,
பம்பாய் டாக்டர் டி.என். ரோடில் உள்ள
அஜந்தா மற்றும் மாதுங்கா,
சியான் சர்க்கிள், இந்தியா அவுஸ் ஆகிய
இடங்களிலுள்ள கோ-ஆப்டெக்ஸ்
விற்பனை நிலையங்களுக்கு
வருகை தரவேண்டுகிறோம்.

CO-3199 TMS

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon